# அநல்

ஆற்றலுடன் வாழ்!



ஸ்ரீ ஜய ஹநுமான்




தமிழ்மாதம் முதல்நாள்தோறும் வெளிவருகிறது

அருள் 7 ] பரிதாபி மாசி (12-2-73) [கருணை 5

## ஆறுமுகசுவாமி விருத்தம்

ஆறுமுகம் பன்னிரண்டு கையும் வேலும்
அலங்கார ஆபரணமணிந்த மார்பும்
திருமுகமும் வெண்ணீறும் புனைந்த மெய்யும்
ஜெகமெல்லாம் புகழ்படைத்தாய் சுப்பிரமணியா
முருகா சரவணபவனே கார்த்திகேயா
முக்கணனார் புத்திரனே உக்ரவேலா
இருவருமே உனைப் பணிந்தோம் பழநிவேலா
இது சமயம் அடியாரை ரட்சிப்பாயே



| | | |
|---|---|---|
| ஆண்டுச் சந்தா ரூ. 6-00 | ஆயுள் சந்தா ரூ 100 | தனிப் பிரதி 50 காசு |

சந்தா அனுப்பவேண்டிய முகவரி :

நிர்வாகி, "அருள்," 231, ஆழ்வார்திருநகர், 8-வது கிராஸ்
சென்னை - 600087

# ஆஞ்சநேய ஸ்வாமி

ஸ்ரீமதி R. ஜானகி சுப்ரமணியம்

புத்திர் பலம் யசோதைர்யம் நிர்பயத்வம் அரோகதா
அஜாட்யம் வாக் படத்வம்ச ஹனுமத் ஸ்மரணாதபவேத்

ஆஞ்சநேய ஸ்வாமியைக் குறித்த ஸ்லோகம் இது. ஆஞ்சநேயரைக் குறித்துத் தவமிருந்தால் எடுத்த காரியம் கைகூடும். வீரத்திற்குப் பெயர் போனவர். வாயுவின் புத்திரர். அஞ்சனை என்பவள் கர்ப்பத்தில் உதித்ததால் ஆஞ்சனேயர் எனப்பெயர்.

சிறிய வயதில் சூரியனைக் கண்டு சிவந்த பழம் ஏதோ ஒன்று ஆகாயத்தில் இருப்பதாக நினைத்து தாவிப் பிடிக்கப்போய் கோபம் கொண்ட சூரிய பகவான் தாடையில் ஓங்கி அடிக்க பூமியில் வந்து விழவும், தாடை நசுங்க, ஒரு பக்கம் விழுந்ததாலும், மறு பக்கம் அடித்ததாலும் ஏற்பட்ட நசுங்கல் காரணமாக ஹனுமான் எனப் பெயர் ஏற்பட்டது.

வாயுவுக்கு அநில என்றும், மருத் என்றும் பெயர் உண்டு. அவருடைய புத்திரர் என்பதற்காக வரதாத் மஜ, மாருதி, அநிலாத் மஜன் எனப் பெயர்களும் உண்டு.

சமுத்திரத்தை நூறு யோஜனை தூரம் அகன்ற சமுத்திரத்தை ஒரே தாண்டலில் தாண்டியவர் ராம காரியமாக.

மழை பெய்தால் பூமி கொதகொதவென்று இருக்கும். அவ்விடத்தில் ஒரு பசுமாடு கால் வைத்தால் அதன் குளம்பு அழுந்தி மழைத் தண்ணீர் தேங்கி நிற்கக் காண்போம். அதை நாம் எவ்விதம் அநாயாசமாகத் தாண்டுவோமோ அதைப்போல் சமுத்திரத்தைத் தாண்டினாராம் மாருதி. வாயுவின் புத்திரர் ஆனபடியால் பறக்கும் வேகம் அதிகம். அதனால்தான் வேகமாகப் போகும் லாரி, ஏரோப்பிளேன்களுக்கு அப்பெயர் வைக்கிறார்கள்.

கொசுவை அடிப்பதுபோல் அனுயாசமாக அடித்து நொறுக்கினராம் ராக்ஷஸர்களை. ராக்ஷஸர்களையே கொசுவைப்போல் நினைத்தார் என்றால் பாக்கிப் பேரை எப்படி நினைத்திருப்பார். ஆகையால்தான் ஸ்ரீ ஆஞ்சநேய ஸ்வாமியை நினைத்தால், வீரமும், தீரமும், படிப்பும், ஆரோக்யமும், பராக்கிரமமும், இன்னும், என்னென்ன தேவையோ அவ்வளவும்

கிடைக்கும் என்பது நிச்சயமாகிறது.

நம் காஞ்சி மாமுனிவர் 7 வருஷங்களுக்கு முன்பு நடந்த காஷ்மீர் எல்லைப் போராட்டத்தில் கலந்து கொண்ட ஜவான்களுக்கு வீரம் ஏற்பட வேண்டி மார்பில் அணிய வீர ஹனுமானின் பதக்கங்கள் நிறைய செய்து அனுப்பினுர்கள். இந்தக் காரணத்தினுலேயே நம்நாடு வெற்றி பெற்றது என்றுலும் மிகையாகாது.

இராமேஸ்வரத்தில் அக்னி தீர்த்த கரையில் ஒரு ஹனுமான் சிலை இருக்கும். சமுத்திரம் பொங்கி ஊருக்குள் வராதிருக்க இவர் கை தூக்கி சமுத்திர ராஜனை அடக்குகிருர். தனுஷ்கோடி பொங்கி ஊர் அழிந்த காலத்திலும் இக்கடல் இவ்விடம் கொந்தளிக்கவில்லை.

ஆஞ்சநேயர் மிக்க படித்தவர் பேசுவதில் சமர்த்தர். சூரிய பகவானிடம் நவவியா கரணமும படித்தவர். சூரியனிடம் சென்று தனக்கு ஒனபது வியாகரணமும் கற்றுத்தர வேண்டினுர்.

சூரியன் தான் கற்றுத்தர இயலாது. தினசஞ்சாரியான எனக்கு ஒய்வேது? எனருர். ஓரிடத்தில் நில்லாது சுற்றிக் கொண்டிருக்கும் என்னை விட்டு விட்டு யாரிடமாகிலும் செல என்றுர். ஹனுமாருக்கு இஷ்டமிலலே. உம்மையே இவ்விஷயத்தில் குருவாக அடைந்து விட்டேன் என்று காலே கெட்டியாகப் பிடித்துக் கொண்டார். பார்த்தார் ஆதித்யன். சரி அப்படி என்றுல் என் கூடவே வந்து கற்றுக் கொள். எனக்குச் சரியாக ஓடுவாயா? என்றுர். `செய்கிறேன் சுவாமி என்றுர். ஆமாம் நான் உன் பக்கம் திரும்பினுல் என் முகம் முன்னேயிருக்காது, பின்புறமாக வல்லவா இருக்கும், முன் பக்கம் எல்லாம் இருட்டிவிடுமே என்றுர். ஆஞ்சநேயர் யோசித்தார் நான் தங்கள் பின் பக்கம் வராமல் முன் பக்கமாகவே உங்களுக்கு முகம் காட்டி நான் பின்பக்கமாகவே நகருகிறேன் என்றுர். இவ்விதமாக கைகூப்பி, ரிவர்ஸில் பின் பக்கமாகவே ஒரு செகண்டு கூட சளைக்காமல் சூரியனின முகத்திற்கெதிராக முகம் காட்டி அவருக்குச் சரியான வேகத்தில் பின் பக்கமாகவே நடநது நவவியாகரணங்களேயும் கறறபிரபு ஆஞ்சநேயஸ்வாமி அவர்கள்.

சிறு குழந்தைகள் முதல் பெரியவர் வரை வணங்கும் துதிக்கும் தெய்வம் அவர்.

தக்ஷிணுமூர்த்தி போன்ற தெய்வங்களே குழந்தைகள் அறியார். ஆனுல் சிறிய திருவடி என்று வைஷ்ணவர்களால் கொண்டாடப் பெறும் ஆஞ்சநேயரே எல்லாருக்கும் பொது. ஆகையால்தான் மாணவ சமூகம் வடமாலே வேண்டிக் கொள்கிறது.



● நமக்கு இப்போதெல்லாம் கோபம் வருவதற்குக் காரணம் கஷ்டப்படாமல் எதையும் செய்து விடுவதற்கு நல்ல வசதி ஏற்பட்டிருப்பதுதான். அதனுல்தான் கோபம் கொள்கிறோம். எல்லாவற்றையும் ஆரம்பம் முதற்கொண்டே சிரமப்பட்டு கஷ்டப்பட்டு, உழைத்துச் செய்து கொண்டு வந்தோமானுல் நிச்சயம் கோபம் வராது.

● நகரத்தார்கள் செய்துள்ள அறங்களில் எல்லாம் சிறந்து அவற்றிற்கு மணிமுடியாய் விளங்குவது காசியில் அவர்கள் செய்து வரும் சமயப் பணியாகும்.

● எழுவதற்கே வீழ்ச்சி, வெல்வதற்கே தோல்வி, விழிப்பதற்கே தூக்கம், நடப்பதற்கே ஓய்வு, பிறப்பதற்கே இறப்பு என்பதை நம்புகிறவனே முன்னேறிச் செல்கிருன்.

● ஸ்ரீ ராமலிங்கஸ்வாமிகள் ஜோதியில் கலந்த இடமான வடலூரில் தைப்பூசத் திருவிழா வெகு சிறப்பாக நடைபெற்றது. வடலூர் சத்திய ஞானசபையின் முன்பாக உள்ள ஸ்ரீ ராமலிங்கர் ஆலயத்தில் பாலாலயம் பகுதியில் ஒரு லெட்சம் பக்தர்கள் ஜோதி தரிசனம் பெற்றனர்.

● ராமாயணம் வெறும் ஹிந்து சமய சாஸ்திரம் மட்டுமன்று. அதைவிட மனித குலத்துக்கு வாழ்க்கைக் கலையைப் போதிக்கும் நூல் என்பதே முக்கியம் என்று ஸ்வாமி சின்மயானந்தா அகில இந்திய ராமாயண மகாநாட்டில் பேசுகையில் குறிப்பிட்டார்கள்.

● நாம் எதற்கும் கவலைப் படக்கூடாது. மன அமைதியோடு இருக்க வேண்டும். எல்லாம் நம்மால்தான் நடைபெறுகிறது என்று எண்ணிஞல் மனத்திலே சாந்தி இருக்காது. நினைத்தபடி நிறைவேற வில்லையே என்ற ஏக்கம்தான் மனக் கவலையை உண்டாக்குகிறது.

● உடலுக்கும் உள்ளத்திற்கும் நன்மை உண்டாக மாலை வேளையில் ஒரு மைல் தூரமாவது நடக்க வேண்டும். இது ஒரு நல்ல பயிற்சியாகும்.

● பொன்னுங்கண்ணி கீரையை தனியாகவும், பருப்புடனும் சமைத்துச் சாப்பிட வேண்டும். தொடர்ந்து சாப்பிட்டால் உடலில் மினுமினுப்பு உண்டாகும். அயச்சத்து அதிகமாக இருப்பதால் உடல் இரும்பு போன்று இருக்கும்.

● தமிழ் நாட்டில் முதன் முதலில் சிட்பண்ட் வியாபாரத்தை துவக்கிய பேங்க், பேங்க் ஆப் மதுரைதான். சமூகத்தில் தாழ்நிலையில் உள்ளவர்களை உயர்த்தும் பணியையே லட்சியமாகக் கொண்டிருக்கிறது இந்த வங்கி.

● மலர்களிலே கனிகின்ற மதுவிலிருந்து பலவிதமான ஈக்க

ளால் - சிறப்பாகத் தேனீக்களால் இயற்கையாகப் பக்குவப்படுத்தப் பட்ட இனிப்பான பாகு போன்ற திரவத்திற்கே தேன் என்று பெயர்.

● பழைய தேவாலயத்தைப் புதுப்பிக்கிறவர்கள், கடவுள் உருவத்தையோ, மந்திரங்கள், அருச்சனை முதலியற்றையோ, மாற்றுதல் கூடாது என பத்ம புராணம் கூறுகிறது.

● நம்மை அன்றி அவன் இல்லை, அவனின்றி நாம் இல்லை என்பதும் அவனுக்கே ஆட்பட்டு வாழவேண்டும் என்பதும், செய்பவனும், செய்விப்பவனும் அவனே என்பது மூல மந்திரத்தின் சுருக்கமாகும். இதனை வெளியிட்டவர் ஸ்ரீமந் நாராயணனே ஆவார்.

● நாசிக் பஞ்சவடியில் கோதாவரி வடக்கேயிருந்து தெற்காக ஓடிப் பிறகு கிழக்கே திரும்புகிறது. ஆற்றின் மேற்கிலும் தெற்கிலும் நாசிக் நகரமும், கிழக்கிலும் வடக்கிலும் பஞ்சவடித் தலமும் இருக்கின்றன.

● ஆறுமாதங்கள் காய்ந்த நெல்லிக் கனிகளை அரை லிட்டர் தண்ணீரில் இரவில் ஊறப்போட்டுக் காலையில் அந்தத் தண்ணீரால் கண்களைக் கழுவிவந்தால் கண் நோய்கள் எல்லாம் குணமாகும்.

● ஸ்ரீ ஸ்ரீ அனந்தராம யதீந்திராளின் அதிஷ்டானம் சேலம் டவுனிலிருந்து 1½ மைல் தூரத்தில் உள்ள சின்ன திருப்பதியில் ஸ்ரீ ஸ்ரீனிவாஸ பெருமாள் ஸன்னிதியில் அமைந்துள்ளது.

● எலுமிச்சம்பழச் சாற்றுடன் சிறிது உப்பு சேர்த்து வாய் கொப்பளித்து வர, வாய்நாற்றம் அழுக்குத் தீர்ந்து பற்கள் முத்துப் போல் பிரகாசிக்கும்.

● திருச்செந்தூரில் வைகாசி விசாகம், ஆவணித் திருவிழா, ஐப்பசிக் கந்தர் ஷஷ்டி விழா, மாசித் திருவிழா இவை மிகவும் சிறப்பாக நடை பெறுகின்றன.

● திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள், பாண்டிய மன்னனது வெப்புநோய் சமணர்களால் தீர்க்கமுடியாமல் இருக்க, அது அவனை விட்டுவிட்டு நீங்கும்படி, பதிகம்பாடி, திருநீறு பூசி அருளினார்.

● நாம் தொடக்கத்தில் மிக உற்சாகமாக ஈடுபட்ட காரியம் வெற்றியடையாமல் தோல்வி அடைவதற்குக் காரணம், நாம் கடைசிவரை உற்சாகமாகஅந்தக் காரியத்தில் ஈடுபடாததே ஆகும். அதில் ஊக்கம் குறைந்து தளர்ச்சி அடைவதுதான், சோம்பல்தான் நம்முடைய தோல்விக்குத் தலையாய காரணம்.

● உருத்திராட்ச மாலையில் இருக்க வேண்டியது 108 மணிகள் என்றும், 54 மணிகள் என்றும் 27 மணிகள் என்றும் கூறுவர். 30 மணி மாலையால் செபித்தால் சுப

காரியம் சித்தியாகும். 27 மணி மாலையால் செபித்தால் அழியாச் செல்வம் சித்தியாகும்.

● திருநீற்றை அணிந்தாலும் அதன் பெருமையைக் கேட்டாலும் துன்பங்கள் எல்லாம் நீங்கும். திருநீற்றைக் கொண்டு பாண்டியனின் தீராத நோய் தீர்க்கப்பட்டது.

● கடற்கரை ஓரத்தில் அழகிய கருங்கற் பணியால், எவரது உள்ளத்தையும் கவரத் தக்கதாய், திருச்செந்தூர் முருகன் கோயில் அமைந்திருக்கிறது. மூலஸ்தானத்தில் ஸ்ரீ சுப்ரமணிய ஸ்வாமி கிழக்கு முகமாக எழுந்தருளி இருக்கிறார்.

● அணை கடந்த வெள்ளத்துக்கு அருந்துணை ஆறல்ல. அலை கடல்தான். இது போன்று பெண்களுக்குப் பெரும் துணை பிறந்த வீடல்ல. புருஷன் வீடே யாகும்.

● பெண் என்பதாலும், தனித்து வாழ நேரும் என்பதாலும் பெண்கள் சந்நியாசம் மேற்கொண்டால் தொல்லைகளுக்கு உட்பட நேரும். ஆகவேதான் ஆன்றோர்களும், ஆகம சாஸ்திரங்களும் பெண்கள் சந்நியாசம் கொள்வதை அனுமதிக்கவில்லை.

● வேலை இல்லாத் திண்டாட்டம் அதிகமாக உள்ள இந்த காலத்தில் தனியார் துறையிலுள்ள பாங்க் ஆப் மதுரை நிறுவனம் வேலை வாய்ப்பு அளிக்கும் விஷயத்திலும் முன்னின்று முனைந்து செயல்பட்டிருக்கிறது. சென்ற ஓர் ஆண்டில் மட்டும் இந்த வங்கி 300 பேர்களுக்கு வேலை வாய்ப்பு அளித்திருக்கிறது. இதில் 125 பேர் பெண்கள் என்பது குறிப்பிடத் தக்கது.

● நல்ல உணவுகளை உண்பதால் உடல் வளரும். நல்ல நூல்களைப் படிப்பதால் உணர்ச்சி வளரும். நல்ல உள்ளத்துடன் சதா இறைவனை நினைப்பதால் நமது உயிர் வளரும். உயிரில்லாத உடல் எதற்கு? அதற்குப் பெயர் பிணம் தானே. எனவே நாம் எப்போதும் உடலை வளர்ப்பதையே கருதாமல் உயிரை வளர்க்க இறைவனை எண்ணவேண்டும்.

● திருநீற்றை ஆள்காட்டு விரலால் தொட்டு பொட்டுப் போல் பூசுதல் கூடாது. நெற்றி நிறையப் பூச வேண்டும்.

● பசுவின் சாணம் புனிதமானது. நச்சுக் கிருமிகளைக் கொல்லும். நாற்றத்தை மாற்றும். அது நாறாது. பெனாயிலும் நல்லதுதான் விஷக் கிருமிகளைக் கொல்லும். நாற்றத்தை மாற்றும். ஆனால் அது நாறும்.

● தருமையாதீனத்திலிருந்து வெளிவரும் திங்கள் இதழ் ''ஞானசம்பந்தம்'' ஆயுள் சந்தா ஏற்பாடு செய்யப்பட்டு அறிவிப்புச் செய்த ஆறுமாதத்தில் 134 அன்பர்களுக்கு மேலாக ஆயுள்

சந்தா செலுத்தி ஆயுள் உறுப்பினராகி உள்ளனர். இதிலிருந்து இன்னும் சமய உணர்வு குன்றவில்லை என்பது தெரிகிறது.

● நாம் கடவுளை எப்போதும் நினைக்க வேண்டும். ஆரம்பத்தில் அது முடியாவிட்டாலும் தினசரி மூன்று முறையாவது நினைக்க வேண்டும். எழுந்தவுடன் இறைவனை ஒரு கணமாவது நினைக்க வேண்டும். உணவு உட்கொள்ளும்போது ஒருமுறை நினைக்க வேண்டும். இரவில் படுக்கப் போகும்போது நினைக்க வேண்டும்.

● பெரியவர்கள் கருணையினால் நாம் இருக்குமிடம் தேடி வருவார்கள். அதனால் அவர்கள் பெருமை குன்றினவர்கள் என்று நாம் எண்ணக்கூடாது. நம் இடம் தேடி. வருவதனால் அவர்கட்குப் பெருமை குறையாது.

● தன் கையால் படுக்கை விரித்துக் கொள்வதும், தன் கையால் ஆசனப் பலகையிட்டுக் கொள்வதும் தன் கையால் அன்னம் படைத்துக் கொள்வதும் ஆக இம் மூன்றும் ஆயுளைக் குறைக்கும்.

● உடலுக்கு உணவு எப்படியோ, அதுபோல் உள்ளத்திற்கு வழிபாடு முக்கியம். வழிபாட்டின் மூலம் ஒவ்வொருவரும் மனத் தெளிவு, ஆன்மத் தூய்மை, உள்ளக் கிளர்ச்சிக் கட்டுப்பாடு, உள்ளத்து உறுதி ஆகியவை பெறுவது நிச்சயம்.

● இன்று மக்களிடையே நோய் அதிகமாகப் பரவி வருவதன் காரணம் உணவுப் பற்றாக் குறை அல்ல. உணவை அதிகமாகவும், தவறாகவும் உண்பது தான்.

● குங்குமப்பூ தோன்றிய இடம் பாரசீகம். இப்போது பல இடங்களில் பயிராகிறது. நம் நாட்டில் காஷ்மீரத்திலும் விளைகிறது.

● எந்தக் காரியத்தையும் புகழ்ச்சி சாதிக்கும். கெட்டவர்களுக்கு அது மணி மகுடம் போன்றது. நல்லவர்களுக்கு அது கொடிய விஷம்.

● வீட்டின் அருமை வீட்டை விற்ற பிறகும், பணத்தின் அருமை அதைச் செலவு செய்த பிறகும்தான் நமக்குத் தெரியும்.

● தன்னைத்தானே புகழ்ந்து கொள்பவன் முட்டாள். தன்னைத் தவிர மற்றவர்களைப் புகழ்ந்து பேசுபவன் புத்திசாலி.

● கோபுர வாசல், துவஜஸ்தம்பம், திருமுற்றம், திருவாசல் முதலிய இடங்களில் விழுந்து வணங்கிவிட்டு, வேறு எந்த நினைவுமின்றி கோயில்களுக்குள் புக வேண்டும்.

# பொன் மொழிகள்



ஸ்ரீமத ஸத்குரு
சாந்தானந்த ஸ்வாமிகள்

உன்னைக் கெடுப்பது இன்பமும், துன்பமுமாகும்.

விருப்பும் வெறுப்பும் உன்னைக் கெடுக்கும் இரண்டு சத்துருவாகும்.

ஆசைகளை ஒழிப்பதே விடுதலைக்கு வழியாகும்.

மனம் போன போக்கில் போகிறவன் மிகப் பெரிய போக்கிரியாகி விடுவான்.

சரணாகதி அடைவதற்குமுன் பயங்கர சோதனைகள் வந்து கொண்டே இருக்கும். அஞ்சாதே

கடவுள் உனக்குள் இல்லையேல் நீ உயிருடன் இருக்கவே முடியாது, மறவாதே. அகந்தையற்றவனைக் கடவுள் தன்மயமாக்கிக் கொண்டு விடுவார்.

ஆசையற்றவனுக்கே அருள் கிட்டும்.

நம்பிக்கை இல்லாதவன் கடவுளைக் காண முடியாது.

நீ சொல்லும் ஒவ்வொரு பொய்யும் ஒவ்வொரு இரும்புத் திரையாகி உனக்குள் இருக்கும் கடவுளை மறைத்து வருகிறதை எண்ணிப்பார்.

எண்ணங்கள் அற்றவனே புண்ணியவான் ஆவான்.

மீன் தரைக்கு வராது. வந்தால் நீருக்குள் போக துடிதுடிக்கும். நீர் கிட்டாவிடில் உயிரை விட்டு விடும். ஸாதுக்கள் துஸ்ஸங்கத்திற்கு வரமாட்டார்கள். வந்தால் மீனையே பின்பற்றுவார்கள்.

எவ்வுயிர்க்கும் உயிர்க்குயிராய் இருப்பவன் கடவுள் ஒருவனே, மறவாதே.

கடவுளை மறந்தவனுக்கு ஆபத்துக்கள் தலைக்குமேல் மலைபோல் வந்துகொண்டேயிருக்கும்.

செய்வது அனைத்தும் கடவுள் தியானத்துடன், கடவுளின் கைங்கர்யமென்று நம்பி திருந்தச் செய்துவா. உன்மனம் தூயதாகி நீ தெய்வ சொரூபமாகவே மாறி விடுவாய்.

மனமே! கடவுளையே நீ சத்தியமாக நம்பி விடு உயிர் உன் உடலில் இருக்குபோதே உன் மனத்தைக் கடவுள் மயமாக்கி கொண்டு செத்தாரைப் போல உன் உடலை (உன்னை) நீ நினைத்துக் கொண்டு உலகில் சஞ்சாரம் செய்து கொண்டிரு, மறவாதே.

நீ காண்பன அனைத்தும் உன்னைப் படைத்த கடவுளின் பெருமையேயாகுமாதலால் இனிக் காண்பன அனைத்தினுள்ளும் நீ கடவுளையே கண்டு வருவையாகுக.

தன்னைக் கொடுப்பவனுக்கு பரிசாக இறைவன் தன்னையே கொடுத்து விடுவான், மறவாதே.

நீ இவ்வுலகில் கற்றுக்கொள்ள வேண்டியது பக்தி ஒன்றையே தான், மறவாதே.

மிகப்பெரிய வேள்வி, பக்தி, யோகம், ஞானமெல்லாம் என்னவென்று நினைத்தாய். எல்லோரிடத்தில் முழுமனத்துடன் அன்பு செலுத்துவதே யாகும்

குப்பைக்கு சக்தியில்லை யென்றால் உரமாக உபயோகிக்க மாட்டான்.

நீ பொய் சொல்வதற்குண்டான சக்தி உன்னிடம் எங்கிருக்கிறதென்பதை மறந்து விட்டாயே!

உனக்குள்ளிருக்கும் ஞானக்கினியில் உன்னை நீ பூர்ணாஹுதியாகக் கொடுத்து விடுவையானால் ஞானப் பிழம்பாக மாறி விடுவாய்.

சங்கல்பம் முடிவில் சூறுவளியாக மாறி உன்னைக் கொன்று விடும்.

தன்னைத்தான் இன்னும் அறியவில்லையே என்ற நெஞ்சம் பதறாதவனுக்கு அசக்கண் திறக்க அஞ்சுமெஃபதை மறவாதே.

நேர்மையற்றவர்களுக்காகவே நரகம் சிருஷ்டிக்கப்பட்டுள்ளதை நீ மறந்து விடாதே.

கலியுகத்தில் பகுத்தறிவுள்ள மக்கள் அனைவரும் கடவுளின் அவதாரமேதான்.

குறைபாடுகள் மனத்திற்குத் தான் உண்டு. ஆத்மாவிற்குக் குறைபாடென்பதே இல்லை. ஆத்மா பூரணமானது, குறையற்றது, அன்பு மயமானது, அளவற்றது மறவாதே.

மனிதனுக்கும் மிருகத்திற்கும் பிள்ளைகள் பிறக்கின்றன. மனிதனாகிய நீ உயர்ந்தவனாக வேண்டுமானால் உன்னை நீ

அறிந்து கொண்டுவிடு, இல்லை யேல் நீயும் ஒரு மிருகம்தான். மறவாதே.

மனித உடலுக்குள் கடவுள் இயற்கையாகவே இருந்து வருகிறார். நீ செயற்கையை நம்பாதே. இயற்கையாகவே இருந்துவிடு.

உன் எண்ணங்களே உன்னைச் சித்திரவதை செய்துவிடும். ஜாக்ரதை.

உன்னுடைய மனம், வாக்கு, காயங்களை கடவுளுக்கே பணி செய்யும்படி ஆக்கிவிடு. கவலை யகன்று போகும்.

நீ நல்ல அறிவுடன் வளர்ச்சி பெற துன்பம் உனக்கு நல்ல உரம் மாதிரியாகும். பயிர்கள் உரத்தை வெறுப்பதில்லை. நீ துன்பத்தை வெறுக்காமல் அதை அனுபவித்து இன்பமயமாக்கி விடு.

தன்னை அறிந்து கொள்ளாதவன் இருந்தும் இறந்தவனே யாவான்.

தன்னை அறிந்து கொள்ள முடியாதவன் அறிவு இம்மைக்கும் மறுமைக்கும் பிரயோசன மற்றதாகும்.

குரு காட்டும் வழியை நம்பி விடு. குரு சொன்னபடி செய். குருஸேவையே கடவுளுக்குச் செய்யும் ஸேவையாகும். குரு காணிக்கையாக உன்னையே குருவிற்குக்கொடுத்துவிடு மறவாதே.

கேடு நினைப்பதில் உள்ளத்துணிவுள்ளவன் கெட்டே போவான்.

நல்லமதி உள்ளவனே இன்ப துன்பத்தில் இருந்து விடுபட முடியும்.

ஆசாபாசம் இருக்கும் வரை அல்லல் பட்டே ஆகவேண்டும்.

# திருப்தி



ஸ்ரீ திருமுருக
கிருபானந்தவாரியார்

திருப்தி என்பது மன நிறைவு, உலகிலே கோடிக் கணக்கான மக்கள் வாழ்கின்றார்கள். ஆனால் திருப்தி யுடையவர்களைக் காண்பது அரிது. நூற்றுக்குத் தொண்ணூற்றென்பது பேர் அதிருப்தியுடன்தான் அல்லல் படுகின்றார்கள்.

திருப்தியுண்டாவதற்குரிய ஒரு சிறந்த வழியைக் கூறுகின்றேன்.

நிரம்பிய செல்வத்தை யடைந்தால் திருப்தியுண்டாகின்றதா? இல்லை இல்லை. பெரும் பெரும் பணம் படைத்தவர்களும் உண்ணாமலும் உறங்காமலும் பேயாய்ப் பறந்து திரிந்து அலைகின்றார்கள்.

நிலபுலம் நிரம்ப உடையவர்களும் மேலும் மேலும் நமக்கு அந்த நிலம் வேண்டும், இந்த நிலம் வேண்டும் என்று எண்ணி ஏங்குகின்றார்கள்.

குச்சு வீட்டில் வாழ்கின்றவன் மச்சுவீட்டில் வாழ்கின்றவனைக் கண்டு இவன் எவ்வளவு சுகமாக வாழ்கின்றான் என்று நெடுமூச்சு விடுகின்றான் மச்சு வீட்டிலேவாழ்பவன் (ஏர் கண்டிஷன் ரூம்) குளிர்ந்த அறை இல்லையே என்று எண்ணி இதயம் புண்ணாகின்றான்.

ஆகவே திருப்தி என்பது பொருளின் சிறப்பில் அமைந்திருக்கவில்லை. அது மனத்தில் விளைகின்ற விளைவு. நாம் திருப்தியுடன் இனிது வாழ வேண்டுமானால் அதற்கு என்ன செய்யவேண்டும்?

நாம் எப்போதும் நம்மினும் தாழ்ந்த நிலையில் உள்ளவர்களைக் கண்டு, ஏதோ கடவுள் நமக்கு

இவ்வளவாவது தந்தாரே, போதும் என்று மன நிறைவு (திருப்தி) அடையவேண்டும்.

குடிசையில் வாழ்கின்றவன், விடின்றி மரத்தடியிலே மழை யிலே நனைந்து வெய்யிலிலே காய் பவனைக் கண்டு, நமக்கு ஆண்ட வன் இந்தக் குடிசையைத் தந் தானே என்று இறைவனுக்கு நன்றி கூறி திருப்தியடைதல் வேண்டும்.

இனி காரிலே போகிறவனைக் கண்டு, குதிரை வண்டியிலே போகிறவன் நமக்குக் கார் இல் லையே என்று நினைக்கக்கூடாது.

குதிரை வண்டியிலே போகின்ற ஒருவன் மாட்டு வண்டியிலே போகின்றவனைக் கண்டு திருப்தி யுற வேண்டும். மாட்டு வண்டி யிலே போகின்றவன் நடந்து போகின்றவனைக் கண்டு களிபேரு வகை யடையவேண்டும்.

நடந்துபோகின்றவன் காலில் லாதவனைக் கண்டு கடவுள் நமக்கு நன்கு நடக்கக் கால்களைத் தந்தாரே என்று மகிழ்ச்சியுற வேண்டும். காலில்லாத நொண்டி நாம் நோயில்லாமலாவது இருக் கிறோமே என்று மகிழ வேண்டும்.

கஞ்சி குடிக்கிறவன் பட்டினி கிடக்கின்றவனைக் கண்டு திருப்தி யடைவேண்டும்.

ஒரு இரவலனுக்கு ஒரு கொடையாளி பத்து ரூபாய் தந்து உதவுவானாயின் அதைக் கண்டு அந்த இரவலன் மெச்சி நன்றி செலுத்தவேண்டும். ஏன் இருபது தரக்கூடாதா என்று அதிருப்தியுடன் தந்தவனை வெறுக்கக்கூடாது.

எனக்கு அந்தப் புண்ணியவான் பத்து ரூபாய் தந்தார்; அவர் நன் றாக இருக்கவேணும்: அவர் குடும் பம் வாழவேண்டும் என்று மெச்சு கின்றவனைக் கண்டு தந்தவன் பிறிதொரு சமயம் இவன் விசுவா சம் உள்ளவன் என்று கருதி மேலும் பத்தோ இருபதோ தந்து உதவிபுரிவான்.

எனவே கிடைத்த பொருளைக் கண்டு இதுவாவது கிடைத்ததே என்று திருப்தியடைவதுவே அறி வுடைமை. அங்ஙனம் திருப்தி யடைகின்றவனைக் கண்டு கடவுள் அருள் புரிகின்றார். வாழ்த்துகின் றார். அதிருப்தியடைகின்றவனைக் கடவுள் இவன் தந்ததைக் கண்டு மெச்சாத மூடன் என்று கருதி விடுவார்.

அதிருப்தி மனிதனை அழித்து விடும். திருப்தி மனிதனை வாழ வைக்கும். ஆகவே அறிவு படைத்த நாம், நம்மினும் உயர் நிலையில் இருப்பவரைக் கண்டு அதிருப்தியடையாமல் நம்மினும் அவல நிலையிலே உள்ளவரைக் கண்டு திருப்தியடையவேண்டும். இதுதான் திருப்திக்குத் தக்கவழி.

"தம்மின் மெலியாரை நோக்
கித் தமதுடைமை
அம்மா பெரிதென் றகமகிழ்க"

என்று இந்தக் கருத்தை அழகாக உபதேசிக்கின்றார் குமரகுருபரர்.

இந்தப் பாடல் மிக்க அருமையானது. இதில் ஒரு விளக்கமுந் தருகின்றார். கல்வி விஷயத்தில் மட்டும் அப்படியிருக்கக் கூடாது.

கல்வி குறைந்தவன் தம்மினுங் குறைந்த கல்வி யுடையானைக் கண்டு திருப்தியடையக் கூடாது. தம்மினும் மேலான கல்வியாளரைக் கண்டு நாம் நன்கு கல்வி பயிலவில்லையே என்று கருத்தழிந்து மேலும் மேலும் கல்வி நலத்தைப் பெறுதல் வேண்டும்.

தம்மின் மெலியாரை நோக்
கித் தமதுடைமை
அம்மா பெரிதென் றகமகிழ்க—
தம்மினும்
கற்றாரை நோக்கிக் கருத்
தழிக கற்றவெல்லாம்
எற்றே இவர்க்குநாம் என்று.



# பெண்கட்கு உபதேசம்

அன்னை சாரதாமணிதேவி

ஒரு பெண்ணுக்கு அடக்கமே சிறந்த அணிகலன். தெய்வீக உருவின் திருவடிகளில் சமர்ப்பிக்கப்படும்போதுதான் ஒரு மலர் தன்னைப்பாக்கியசாலியாகக் கருதுகிறது. இல்லாவிட்டால் அம்மலர் செடியிலேயே வாடிவிடுவதே சாலச்சிறந்தது. ஆடம்பரக்காரன் ஒருவன் அம்மலர்களால் ஒரு பூச்செண்டு செய்து அதை முகர்ந்து 'என்ன நறுமணம்!' என்பதைக் காண்பது எனக்கு மிக்க வருத்தத்தைத் தருகிறது.

பெண்கள் வெகு எளிதில் கோபத்திற்கு ஆளாதல் கூடாது. அவர்கள் பொறுமையைக்கடைப்பிடிக்கப் பழகுதல் வேண்டும். குழந்தைப் பிராயத்திலும் பாலபருவத்திலும் பெற்றோர்களும், வாலிப வயதில் அவர்தம் கணவருமே பெண்கட்குக் காப்பாவர். பொதுவாக அவர்கள் 'ரோஷ'முடையவர்கள். ஒரு வார்த்தையே அவர்களை நிலைகுலையச் செய்துவிடும். இக்காலத்திலோ மொழிகள் அவ்வளவு சகாயம். ஆகவே, அவர்கள் துன்பம் நேரும் காலத்தும் பொறுமையுடன் பெற்றோர்க்கோ கணவர்க்கோ அடங்கியொழுக முயலவேண்டும்.

ஒருநாள் ஒரு பெண்மணி, அன்னையாரை அணுகித் தன் பெண்ணை மணக்கப் பணிக்குமாறு வேண்ட, அதற்கு அன்னை அளித்த பதிலாவது:

"வாழ்நாள் முழுவதும் ஒருவனுக்கு அடிமையாக எப்போதும் அவனது சொற்படி நடந்து கொண்டிருப்பது துன்பந் தரத் தக்கதல்லவா? பிரம்மசாரிணியாக வாழ்வதில் சிறிது ஆபத்து இருப்பினும், ஒரு பெண் இல் வாழ்வு நடத்த விருப்பாவிடில், அவளை வலிந்து புகுத்தி, ஆயுள் முழுவதும் உலகப்பற்றுக்கு உட்படுத்தக் கூடாது. துறவு வாழ்க்கை நடத்த விரும்பும் பெண்களையெல்லாம், பிரம்மசரிய வாழ்வு நடத்துமாறு ஊக்கவேண்டும்"

குழந்தாய்! இம்மானிடப் பிறவியைப் பெற்ற நீ பெரும் பாக்கியசாலி, இறைவனிடம் தீவிர பக்தி கொள். கடுமையாக உழை. உழைப்பின்றி எதுதான் ஒருவர்க்குக் கைகூடும்? ஒவ்வொரு நாளும் அதிகமாக உழைக்கும் நேரங்கட்கிடையிலும், பிரார்த்தனைக்கெனச் சிறிது நேரத்தை ஒதுக்கி

வை. நான் தக்ஷிணேஸ்வரத்தில் மிகவும் சுறுசுறுப்பாக வாழ்ந்த காலங்களிலும், பிரார்த்தனையையும் தியானத்தையும், பழகி வந்தேன்... மனக்கவலையிருப்பதாக முறையிடும் என் சகோதரியும் அவ்வாறு செய்யட்டும். நாடோறும் விடியற் காலையில் மூன்று மணிக்கு எழுந்து தியானத்திற்கு அவள் அமர்வாளாக. பிறகும், அவளிடம் அக் கவலைகள் உள்ளனவா என்பதைக் காண்போம். ஆனால் அவள் தன்னுடைய துன்பங்களைப் பற்றிப் பேசுவாளேயல்லாது அவ்வாறு செய்யமாட்டாள்: அவளுக்கு என்ன துன்பம்? குழந்தாய், கவலை இன்னதென்பதை யான் ஒருகாலும் அறிந்ததில்லை.

கணவன், மகன், உடல்—இவையெல்லாம் மாயையே. அவை மாயையால் ஏற்பட்ட பந்தங்களே. அவற்றினின்றும் உன்னை நீ விடுவித்துக்கொண்டாலன்றி, நீ முக்தியடைய மாட்டாய். இவ்வுடலின் மீதுள்ள பற்றும், இவ்வுடலையும் அதனுள்ளுள்ள ஆன்மாவையும் ஒன்றெனக் கருதும் மனப்பாங்கும், மறையவேண்டும். குழந்தாய்! இவ்வுடல் எனப்படுவது யாது? (எரித்தபின்) மூன்று ராத்தல் சாம்பலேயன்றி வேறல்ல. பின் இதைப்பற்றி ஏன் அவ்வளவு ஆடம்பரம்? உடல் எவ்வளவு பெரிதாக இருந்த போதிலும், அதன் முடிவு மூன்று ராத்தல் சாம்பலே தான்; இப்படியிருந்தும் மக்கள் அதன்மீது மட்டற்ற பற்றுக் கொண்டுள்ளனர்!

ஒருவரை ஸாதுவாகும்படி தூண்டியதற்காகத் தூய அன்னையாரைக் குற்றஞ்சாட்டி, 'மணம் புரிந்து கொண்டு இல்வாழ்க்கையில் ஈடுபடுதலும் ஒருவகை மாதர் கோட்பாடே'' என்று கூறிய ஒரு பெண்மணியை நோக்கித் தூய அன்னையார் கூறியதாவது:

''பெண்ணே! நான் உரைப்பதைக் கேள்; இவர்களெல்லோரும் தெய்விகக் குழந்தைகள்; முகரப்படாத மலர்களைப்போலத் தூய்மையான வாழ்வை அவர்கள் நடத்துவார்கள். இதைவிட மென்மையானது வேறெது? இம் மண்ணுலக வாழ்வு எத்தகைய இன்பத்தைத்தரும் என்பதை நீயே உணர்ந்திருக்கிறாய். இவ்வளவு நாட்களாக நீ என்னிடமிருந்து கற்றது யாது? இக வாழ்வின்மீது ஏன் அவ்வளவு பற்று? எதற்காக இவ்வளவு மிருகத்தனமான இச்சை? எவ்விதமான இன்பத்தை அதனின்றும் நீ துய்க்கிறாய்? கனவிலேனும் ஒரு தூய இலக்ஷிய வாழ்வைக் கருத உனக்கு இயலாதா? இப்போது உன் கணவனுடன் சகோதர — சகோதரி வாய்வை நடத்த உனக்கு முடியாதா? கீழ்த்தரமான வாழ்வு வாழ ஏன் இவ்வளவு இச்சை? உலகத்தின் இன்ப — துன்பமே என் எலும்பை உருக்கி வருகிறது.

ஒருநாள், ஒருதாய், துறவிக் கோலம் பூண்ட தன் மகனை மீண்டும் உலக வாழ்விற் புகச்சொல்லுமாறு அன்னையை வேண்ட, அவர் கூறியதாவது: ''ஒரு துறவிக்குத்

தாயாக இருக்கும் பேறு கிடைப்பது எளிதல்ல: ஒரு பித்தளைப் பாத்திரத்தின்மீதுள்ள பற்றைத் துறப்பதே மக்களுக்கு முடியாது போகிறது. இவ்வுலகத்தையே துறப்பது எளிதானதா? உனக்கேன் இந்தக் கவலை?''

புதிதாக உபதேசம் செய்யப்பட்ட ஒரு சிடப்பெண்ணை நோக்கித் தூய அன்னையார் கூறியதாவது: ''அப்பொழுதுதான் விதவையான எந்தப் பெண்ணுக்கும் நான் உபதேசம் செய்வதில்லை. ஆயினும் உன்னிடம் ஞான சுபாவம் இருப்பதால்தான் உனக்காக அவ்விதியை விட்டு விலகினேன். நான் செய்த இக்காரியத்திற்காகப் பின்னால் யான் வருந்தாதபடி நீ நடந்துகொள்ள வேண்டும். சிடன் செய்த பாபத்தினால் குருதான் துன்பமடைகிறார். எப்போதும் காலமுறை தவறாமல், புனித மந்திரத்தை ஜெபிப்பாயாக.''

புக்ககம் சென்றுகொண்டிருந்த ஒரு பெண்ணிற்கு கூறிய புத்திமதியாவது: — ''எவருடனும் மிகவும் நெருங்கிப் பழகாதே. குடும்பத்திலே பலர்கூடி நடத்தும் கொண்டாட்டங்கள் எதிலும் அதிக அளவு பங்கெடுத்துக்கொள்ளாதே. எப்போதும் மனத்தை நோக்கி 'மனமே! அடக்கமாயிரு' என்று சொல். பிறரைப் பற்றி அறிய ஆவல் கொள்ளாதே. தியானமும், பிரார்த்தனையும் செய்யும் நேரத்தைக் கொஞ்சங் கொஞ்சமாக அதிகப்படுத்திக் கொண்டு வா.''

தூய அன்னையார் தம்முடைய மற்றொரு சிடப்பெண்ணிற்குக் கூறிய எச்சரிக்கையாவது: ''எந்த ஆணுடனும், உன்னுடைய தந்தையாயினும் சகோதரனாயினும் சரி, நெருங்கிய தொடர்பு கொள்ளாதே. பின் பிறரைப் பற்றி உரைப்பானேன்? கடவுளே மனித உருவில் உன்னிடம் வந்தாலும் கூட, அவருடன் நீ நெருங்கிய உறவு கொள்ளலாகாது.''

ஒரு குழந்தையை ஸ்வீகாரம் செய்து கொள்ள எண்ணிய ஒரு பெண்மணியிடம் தூய அன்னையார் கூறியதாவது: — ''அவ்வாறு செய்யாதே. பிறருக்கு நீ ஆற்ற வேண்டிய கடமைகளை எப்போதும் செய்து வா; ஆனால் உன்னுடைய அன்பைக் கடவுளிடத்து மட்டுமே நீ செலுத்தவேண்டும். உலகத்தாரிடம் வைக்கும் அன்பு தன் பின்னே சொல்லொணாத் துயரங்களையும் எப்போதும் இழுத்துக்கொண்டு வரும்.''

எந்த மானுடப் பிறவியை நீ நேசித்தாலும், அதற்காக வருந்தத் தான் நேரிடும். எவள் இறைவன் ஒருவனிடம் மட்டுமே அன்பு செலுத்துகிறாளோ, அவளே உண்மையில் பாக்கியசாலி. கடவுளை நேசிப்பதால், எவ்விதத் துன்பமும் ஏற்படுவதில்லை.



# உயிர்களும் கடவுளும்

ஸ்ரீலஸ்ரீ சோமசுந்தர ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக
பரமாச்சாரிய சுவாமிகள்

உயிர்கள் எண்ணில்லாதன. என்றும் உள்ளன உயிர்களுக்கு உருவம் கிடையாது.

உருவம் இல்லாத உயிர்கள், உருவமுள்ள உடலகளைச் செயற்கையால இயக்கும் சக்தியுடையன.

உயிர்கள் இயற்கை அறிவுடையன அலல.

உயிர்கள் பிறர் அறிவிக்க அறியும் செயற்கை அறிவு உடையன.

உயிர்கள் இல்லாத உடல்கள் வளர்வதில்லை. தொழிற்படுவதில்லை. உடல்கள் இல்லாத உயிர்களும தொழிறபடுவதில்லை.

உயிர்கள் இல்லாத உடல்கள் அறிவற்ற நாற்றமுடைய கட்டைகளே.

உடல்களுக்குத் தனியே வளர்ச்சியும், தொழிற்பாடும் கிடையா.

உருவமில்லாத உயிர்கள், உருவமுள்ள உடல்களில் தங்கியிருக்கின்றன.

உயிர்கள் விரும்பியபடி உடல்களில தங்கியிருக்க முடியவில்லை; உடல்களை உண்டாக்கவும் முடியவில்லை.

பெற்றோரும் உடல்களுக்கு உயிரைக் கொடுக்கவும, பிரிக்கவும் முடியவில்லை; அவர்கள் விரும்பியபடி உடல்களை உண்டாககவும முடியவில்லை.

ஆனதால், உடல்களை உண்டாக்கவும, உடலகளில உயிர்களைப் புகுத்தவும பிரிக்கவும செய்கிற ஒருவர் உண்டு என்பது மறுக்க முடியாத உண்மையாகும.

அப்படிச் செய்பவரையே கடவுள் என்று சொல்லுகிறோம. கடவுள் உயிர்களைப் படைக்கவில்லை. கடவுள் உடல்களையே படைக்கின்றார்.

உயிர்களைக் கருணையுள்ள கடவுள் படைத்திருந்தால், அவர் எல்லோரையும் ஒரே தன்மையாகப் படைத்திருக்க வேண்டும்.

உயிர்களின் தன்மைகள் பலதரப் பட்டிருப்பதை அவற்றின் தொழிற்பாட்டிலிருந்து உணர்கிறோம.

கடவுள் உயிர்களின் தன்மைக்குத் தகுந்த உடலகளைக் கொடுக்கின்றார்.

நாம் வாழ்வதற்கு இன்றியமையாத உடல்களையும், உலகத்தையும், சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள, கிரகங்கள், மழை, நெருப்பு, காற்று, ஆகா

யம், முதலியவற்றையும் மனிதர்கள் உண்டாக்கவில்லை.

அவைகளும் ஒரு முறைப்படி தொழிற்படக் காண்கின்றோம்.

அவற்றை அந்த முறையில் இயக்குவதும் கடவுள்தான். கடவுளுக்கு அளவிறந்த ஆற்றலும் அறிவும் இருக்கின்றதை அவற்றிலிருந்து உணரலாகும்.

நமக்கு உடல்களைக் கொடுத்து, நமக்காக உலகத்தையும் படைத்து, நம்முடைய அறிவையும் வளர்த்து வருகின்ற கடவுளுக்கு நாம் நன்றிகூற, அவரைப் பூசித்துப் புகழ்ந்து பாட வேண்டியது அவசியமாகின்றது. அவருடைய உயர்வையும், நம்முடைய தாழ்வையும் உணர்ந்து, அவருடைய திருவருளைப் பெற்று நாம் உய்ய வேண்டிய நெறியை இவ்வுடல் உள்ளபோதே, இன்றே தொடங்கவேண்டும்.



● சமணர்கள் தன்னைக் கல்லிற் கட்டிக் கடலில் தள்ள அக் கல்லையே தெப்பமாகக் கொண்டு மிதந்து கரை சேர்ந்தவர் அப்பர் பெருமான்.

● காஞ்சி காமாட்சி அம்மன் கோயிலில், தேவியின் ஆலயத்தில் மூன்றும் பிரகாரத்தில் கீழ்க் கோபுரத்தின் உட்புறம் தேவியை நோக்கிய வண்ணம் மகிஷாசுர மர்த்தனி தேவியானவள் நின்ற கோலத்தில் உள்ளாள்.

● மயிலை ஸ்ரீ கற்பகாம்பாள் கோவிலின் வருட வருமானம் சுமார் ரூபா 6 லெட்சமாகும். வருடச் செலவு ரூபா 5½ லெட்சம் போக வருடம் ரூபா ஐம்பதினாயிரம் சேமித்து வைக்கப்படுவதாக கணக்குக் காண்பிக்கப்படுகிறது.

● உலகத்தின் மூன்று மாபெரும் வல்லரசுகளில் கிரிக்கெட் ஆட்டமே கிடையாது. ருஷ்யா, சீனு, அமெரிக்கா, மூன்றிலும் கிரிக்கெட் கிடையாது. இந்த மூன்றும்தான் உலகத்தின் பெரும் பகுதி மக்களை தன்னுள் கொண்டிருக்கின்றன.

● கலியுக வரதனுகவும், கண் கண்ட தெய்வமாகவும் விளங்கிடும் ஸ்ரீ ஞான தண்டாயுத பாணியாக எழுந்தருளி உள்ள பழநி மலைக் கோயிலில் பக்தர்களுக்கு போதிய வசதிகள் செய்து தர ஏறத்தாழ 60 லெட்ச ரூபாய் செலவில் ஒரு மாபெரும் திருப்பணித் திட்டம் 16 கட்டங்களாகச் செயல்பட உள்ளது.

● சுமார் 300 ஏழைப் பள்ளி மாணவர்களுக்கு ஆறுபடை வீடுகளில் ஒன்றுன திரு ஆவினன் குடிக் கோவிலில் மதிய உணவு வழங்கப்பட்டு வருகிறது. இதற்கு வருஷம் ஒன்றுக்கு சுமார் 12,000 ரூபா செலவாகிறது.

● கோவில் தேர்களை ஏலம் விட்டோ, அல்லது வேறு எந்த வழிமூலமோ கோவில் தேர்களை விற்கக் கூடாது என்று எல்லா ஆலயங்களுக்கும் தமிழ்நாடு அரசாங்கம் உத்தர விட்டிருக்கிறது. கும்பகோணம், ஆவுடையார் கோவில் தேவஸ்தானங்கள் தங்களுடைய தேர்களை ஏலம் விட அரசாங்கம் அனுமதிக்காது என்றும் தமிழக அறநிலைய அமைச்சர் சொன்னுர்.

● ஸ்ரீ ராமலிங்க சுவாமிகள் ஜோதியில் கலந்த இடமான வடலூரில் தைப்பூசத் திருவிழா வெகு விமரிசையாக நடந்தது. வடலூர் சத்திய ஞான சபையின் முன்பாக உள்ள ஸ்ரீ. ராமலிங்க ஆலயத்தின் பாலாலயம் பகுதியில் ஒரு லெட்சம் பக்தர்கள் ஜோதி தரிசனம் பெற்றனர்.

● தை மாதம் முதல் ஆனி மாதம் வரை பூகோளத்தின் வட பாகத்தில் சூரியனின் சஞ்சாரம், இதுவே உத்தராயணம் எனப்படுவது. ஆடி மாதம் முதல் மார்கழி மாதம் வரை பூகோளத்தின்

தென்பாகத்தில் சூரியன் சஞ்சரிக்கிறன். இதுவே தக்ஷிணாயனம் எனப்படுவது. தக்ஷிணாயனம் மழையும், காற்றும் பனியும் உள்ள காலம். உத்தராயணமோ, மேற்கூறிய எல்லாம் தீர்ந்து கல்யாணங்களும், தூரதேச பிரயாணங்களும் மேற்கொள்ள ஏற்ற காலம்.

● தனியார் துறையில் செயல்படும் சிறந்ததொரு வங்கியான பாங்க் ஆப் மதுரை லிமிடெட், அதிவேகமாக வளர்ச்சி பெற்று வருகிறது. சிறு வியாபாரிகளுக்கும், சுயமாகத் தொழிலில் ஈடுபடுவோருக்கும் அது செய்யும் நிதி உதவிகளும் சிறந்த முறையில் அதிகரித்திருக்கிறது.

● திருக்கோவிலூரில் தபோவனத்தில் அத்யாத்ம வித்யாலயம் அமைத்து ஆத்ம ஞானம் போதித்து வரும், ஸத்குரு ஸ்ரீ ஞானனந்த கிரி ஸ்வாமிகள் அவதார தினம் 'தை' கிருத்திகை இவ்வாண்டு ஜனவரி 14ந் தேதி ஞாயிற்றுக்கிழமை யன்று கிருத்திகைத் திருநாளில் வந்தது. ஸ்வாமிகளின் வயது எவருக்கும் தெரியாது.

● தாய்மை உள்ளமும், கற்புடைமையும் தாய்மார்களின் தனிப் பெரும் புகழுக்கு இரு கண் மணிகளாக அமைந்துள்ளன. அதனுல்தான் மாதர்கட்கு இல்லத்திலும், வெளியிலும் பொது மன்றங்களிலும், பிரயாண நிலையங்களிலும் எங்கும் தனிச் சிறப்பு வழங்கப்பட்டுள்ளன.

● நல்ல கணவராக வரவேண்டும் என விரும்பும் பெண்கள் நாள்தோறும் ஆண்டவனை வேண்டிக் கொள்ள வேண்டும். பௌர்ணமி அன்று பூர்ண சந்திர வழிபாட்டை மாதந்தோறும் வழிபாடு செய்யவேண்டும். அப்படிச் செய்பவர்களுக்கு அன்பான கணவராக அமைவார்.

● தமிழ் மக்கள் கடவுள் பக்தியில் சிறந்தவர்கள், கடவுளை அவர்கள் தங்களுடைய வாழ்க்கையில் என்றும் மறந்ததே இல்லை. இறைவனை வாழ்த்துப் பொருளாக மட்டுமின்றி வாழ்வுப் பொருளாகவும் தமிழர் கொண்டனர்.

● முருகனுக்குரிய படைவீடுகள் ஆறு. இதில் முதலாவதாக விளங்குவது திருப்பரங்குன்றமாகும். முருகப் பெருமான் இப்பதியில் தான் தேவயானை அம்மையைத் திருமணம் செய்தருளினர். ஆண்டவனின் அருள் முழங்கும் திருத்தலம் திருப்பரங்குன்றம்.

● அர்ச்சகர்கள் ஒவ்வொரு பூஜை வேளையிலும் "எல்லா மக்களும் சுபிட்சமாக, சௌக்யமாக, நெறி தவருமல் புகழத்தக்கவாறு வாழ்ந்துவர அநுக்கிரகிக்க வேண்டும்" என்று பிரார்த்தித்துக் கொண்டு பகவானுக்கு விசேஷ அர்ச்சனை செய்து வரவேண்டும்.

● தவம் செய்யும் ஆற்றல் இல்லாதவர் திருநீற்றை உள்ளன்

புடன் பூசிக் கொண்டால் தவம், தானம், தருமம், விரதம் முதலிய யாவும் செய்த பயனைப் பெறு வார்கள்.

● வாழ்க்கையில் தன்னால் சாதிக்க முடியாதவைகளை எழுத் தாளன் தன் நூல்கள் மூலம் சாதித்துக் காட்டுகிறான்.

● பெண் ஒரு டாக்ட ராகவோ, வக்கீலாகவோ, விஞ் ஞானியாகவோ, எழுத்தாளரா கவோ இல்லாமல் போனாலும் நம்மால் வாழமுடியும். ஆனால் அன்னையாகவோ, மனைவியா கவோ, சகோதரியாகவோ, தோழியாகவோ அவர்கள் இல் லாமல் போனால் நம்மால் வாழ முடியாது.

● பணத்தையும் காலத்தை யும் போன்ற சுவையான பொருள் வேறு ஒன்றும் கிடையாது. ஒருவ ருக்கு இவற்றில் ஏதாவது ஒன்று உபயோகப் படுத்த முடியாத அளவுக்கு அதிகமாகப் போனால் அவரைப் போன்ற துரதிர்ஷ்ட சாலி கிடையாது.

● ரூபாய்க்கு உள்ள மதிப்பு சில்லறைக் காசுகளுக்கு கிடை யாது. இருந்தாலும் கோவில்களி லுள்ள உண்டியல்களில் போகும் பெரும் பாக்கியம் சில்லறைக் காசுகளுக்குத்தான் உண்டு.

● நாம் நினைக்கிற காரியங் களைச் செய்வது அப்படி ஒன்றும் கஷ்டமில்லை. ஆனால் எந்தக் காரி யத்தை முதலில் செய்வது என்று முடிவு கட்டுவதுதான் பெரும் கஷ்டம்.

● நகமும் முடியும் உயிருள் ளவைதான். ஆயினும் அவற்றில் நரம்புகள் கிடையாது. அத னாலேயே அவைகளைக் கத்தரிப்ப தால் வலிப்பது இல்லை.

● எந்த ஒரு காரியத்தையும் நாம் ஆரம்பிக்கும் முன்பு கட வுளை மனமுருகிப் பிரார்த்தித்து விட்டுப் பிறகு செயல்படுவது வெற்றியைத் தேடித்தரும். அல் லது தோல்வி ஏற்பட்டாலும் நமக்குச் சோர்வு ஏற்படாது.

● யோகாசனங்கள் செய்யும் முன் உணவு உண்டு குறைந்தது ஆறுமணி நேரம் ஆகியிருக்கிறதா என்பதைக் கவனிக்க வேண்டும். பயிற்சி செய்யும் எந்தக் கட்டத் திலும் வாயினால் சுவாசம் விடக் கூடாது. மூக்கினாலேயே சுவாசிக்க வேண்டும்.

● அன்பு காரணமாகத் தோன்றும் எண்ணங்களும், போதுமென்ற மனமும், மனம் விட்டுச் சிரிப்பதும் மனிதனுடைய ஆயுளை நீடிக்கச் செய்கின்றன.



# ஸ்ரீ குருவாயூரப்பன் மஹிமை

ஸ்ரீ சேங்காலிபுரம் அனந்தராம தீக்ஷித அவதூத ஸ்வாமிகள்

ஸ்ரீ குருவாதபுரி க்ஷேத்ரமாகிய குருவாயூரில் ப்ரத்யக்ஷ தெய்வமாக விளங்கிக் கொண்டு பக்தர்களை ரக்ஷித்து வரும் ஸ்ரீ குருவாயூரப்பனின் பெருமை எழுத்தில் அடங்காது. தினந்தோறும் பக்தர்கள் ஸ்ரீ குருவாயூரப்பனின் பெருமையை உணர்ந்து ஆச்சர்யப்பட்ட வண்ணம் இருக்கிறார்கள். கர்ண பரம்பரையாகச் சொல்லப்பட்டு வரும் ஒருகதை இதற்குச் சான்றாக விளங்கும்.

ஒரு சமயம் ஒரு பக்தர் தன் குடும்பத்தாரோடு ஸ்ரீ குருவாயூரப்பனைத் தரிசித்து வரச் சென்று கொண்டிருந்தார். தற்காலப் போக்குவரத்து வசதிகள் இல்லாத காலம். மாட்டுவண்டிகளில் அக்குடும்பத்தார் குருவாயூரை நோக்கிச் சென்று கொண்டிருந்தார்கள். வழியில் இருட்டிவிட்டது. தங்குவதற்கு இடமும் இல்லை. ஸ்ரீ குருவாயூரப்பன்மேல் பாரத்தைப் போட்டு விட்டு, இருட்டோடு இருட்டாகவே அவர்கள் யாத்திரை செய்து கொண்டிருந்தனர்.

அந்தப் பாதையில் அந்தக் காலத்தில் திருடர்கள் பயம் அதிகம். பாதி வழியில் நன்றாக இருட்டிவிட்டது. திடீரென்று பக்கத்திலுள்ள காடுகளிலிருந்து பல திருடர்கள் வண்டிகளை வழி மறித்துக் கொண்டு விட்டனர். எல்லோரும் நடுங்கினர். குடும்ப எஜமானர், 'ஹே குருவாயூரப்பா! உன்னைக் காணவேண்டுமென்று இரவுக்கு இரவாகப் புறப்பட்டு வந்துகொண்டிருக்கும் எங்களுக்கு இந்தச் சோதனையா? நீதான் எங்களைக் காப்பாற்ற வேண்டும்' என்று மனமுருகி உரக்கக் கூவினார். அதே க்ஷணத்தில் எங்கிருந்தோ குதிரைக் குளம்புகளின் ஓசை கேட்டது மறு விநாடி, அங்கு ஒரு பெரிய குதிரையின் மேல் போலீஸ் உடை அணிந்து கொண்டு ஆயுதந்தாங்கி வெகு வேகமாக அந்த இடத்தை நோக்கி ஒருவன் வந்து கொண்டிருந்தான். திருடர்களின் தீவட்டி வெளிச்சத்தில் குதிரை மேல் வரும் அந்தப் போலீஸ் ஜவானின் உருவம் நன்கு தெரிந்தது.

உடனே திருடர்கள் அனைவரும் பயந்து, பக்கத்திலுள்ள காடுகளில் ஓடி மறைந்து விட்டனர். குதிரையில் வந்த ஜவான் குடும்ப எஜமானனுக்குத் தைரியம் கூறியதுடன் குருவாயூர் போய்ச் சேரும் வரையில் தான் துணைக்கு வருவதாயும் சொல்லவே, அந்த பக்தருக்கு மிகுந்த ஆச்சர்யமுண்டாயிற்று.

அக்குடும்பத்தார் குருவாயூரை அடையும்போது நடுநிசியாகிவிட்டது. அங்கு வந்து சேர்ந்தவுடன், அந்த பக்தர் ஜவானுக்கு ஸன்மானம் அளிக்க விரும்பினார். ஆனால், ஜவான் எதுவும் வாங்க மறுத்து விட்டார். இருந்தாலும் பக்தரின் மனம் கேட்கவில்லை. தன் கை விரலில் அணிந்து கொண்டிருந்த மோதிரத்தைக் கழற்றிப் பலவந்தமாக ஜவானின் கைவிரலில் போட்டு விட்டார். உடனே அந்த ஜவான், 'ஜீவர்களைக் காப்பாற்றுவதே என் கடமை' என்று கூறிவிட்டு மறைந்து விட்டார்.

மறுநாள் பக்தர் தன் குடும்பத்துடன் புஷ்கரணியில் ஸ்னானங்களை முடித்துக் கொண்டு பக்தி ச்ரத்தையுடன் ஸ்ரீ குருவாயூரப்பன் ஸன்னிதியில் விடியற்காலம் 4 மணிக்கு நிர்மால்ய தரிசனத்திற்கு வந்து நின்றார். என்ன ஆச்சர்யம்! ஸ்ரீ குருவாயூரப்பன் கைவிரலில் முந்தின நாள் இரவு ஜவானுக்கு அவர் அணிவித்த மோதிரம் மின்னிக்கொண்டிருந்தது! பக்தரின் உள்ளம் பக்தியால் பொங்கியது. ஸ்ரீ குருவாயூரப்பனின் கருணையை வாய்விட்டுப் புகழ்ந்தார். அந்த சமயம் அங்கு வந்த நம்பூதிரி தெரிவித்த தகவல் இன்னும் ஆச்சர்யத்தைக் கொடுத்தது. முந்தின நாள் இரவு நம்பூதிரியின் கனவில் ஸ்ரீ குருவாயூரப்பன் தோன்றி, பக்தரைத் திருடர்களிடமிருந்து காப்பாற்றியதையும், பக்தர் மோதிரத்தைத் தனக்கு அளித்ததையும், அதைத் தான் கையில் அணிந்து கொண்டிருப்பதையுங் கூறி மறைந்தாராம். கனவில் கண்டபடியே நம்பூதிரி அதிகாலையில் எழுந்து நியமங்களுடன் கோயிற் கதவைத் திறந்ததும், அந்த மூர்த்தியின் கைவிரலில் மோதிரம் இருக்கக்கண்டு பிரமித்ததாயும் நம்பூதிரி அந்த பக்தரிடம் கூறினார். இத்தகைய பெருமை வாய்ந்த ஸ்ரீ குருவாயூரப்பனை லோக க்ஷேமார்த்தம் ப்ரார்த்திப்போமாக.

# பர்த்ருஹரியின் பொன்மொழிகள்

ஸ்ரீ ஆர். முத்துகிருஷ்ண சாஸ்திரி

அமுதத்திற் கொப்பான இனிய வார்த்தைகளால் மூர்க்கர்களைத் திருத்த முயற்சிப்பது, மதம் பிடித்த யானையை தாமரை நூலைக்கொண்டு கட்டுவதற்கும், மிக மிருதுவான மலர் நுனியால் மிக கொடியான வஜ்ரமணியைத் தொளையிட முயறசிப்பதற்தும், ஒருதிவிலைத்தேனை ஊற்றி உப்புக் கடலை இனிப்பாகச் செய்ய விரும்புவதற்கும் சமமாம். அதாவது மூர்க்கர்களைத் திருத்த யாராலும் ஒரு பொழுதும் இயலாது என்பதாம்.

அறிவற்றவர்கள் தம் அறியாமையை மறைத்துக்கொள்ளுவதற்கென பிருஹ்மதேவன் ஒரு சாதனத்தைப் படைத்துள்ளான் அது நிச்சயமாக பயன்தரக் கூடியது. அவர்களிடம் எப்பொழுதும் உள்ளது அதைப் பயன் படுத்த பிறர் உதவி தேவை இல்லை. அது என்னவென்றால் அறிஞர்கள் கூட்டத்தில் வாய் திறக்காமல் மௌனமாக இருத்தல் என்பதுதான். அதுதான் அவர்களுக்குச் சிறந்த அலங்காரம்.

அறிவற்றவனாக இருந்த ஒருவன் பெரியோர்களிடம் படித்தும், கேட்டும் பல நல்ல விஷயங்களை அறிந்து கொண்ட பின் கூறுகிறான்:— நான் மிகச் சொற்ப அறிவுள்ளவனாக இருந்தபோது மதம் பிடித்த யானைபோல் "எதைச்செய்யலாம், எதைச் செய்யலாகாது" என்ற பகுத்தறிவற்றவனாக இருந்தேன். எல்லாமறிந்தவன் என என் மனம் கர்வங்கொண்டிருந்தது. "அல்ப வித்யோ மஹாகர்வீ" என முன்னோர்கள் வாக்கு. அறிவாளிகளையண்டி அவர்களிடமிருந்து பல சாஸ்திரங்களின் உண்மைகளையும் நற்பழக்க வழக்கங்களையும் அறிந்து கொண்ட பின்புதான் நான் இவ்வளவு நாளாக மூடனாக இருந்தேன்" என்பதை உணர்ந்தேன் ஜ்வரம் போல் என் உள்ளத்திலும் உடலிலும் பலவித மாறுதல்களைத் தோற்றிவைத்த கர்வமும் என்னைவிட்டு அகன்றது.

சொற்ப அறிவுள்ளவனானலும் "எல்லாம் அறிந்தவன்" எனத் தன்னைக் கருதிக்கொள்ளுகின்றவன் மூர்க்கன். எல்லாமறிந்திருந்தும் எனக்கு என்ன தெரியும்? அறிந்துகொள்ள வேண்டியவை இன்னும் எவ்வளவோ? எனக் கருதுகின்றவனே உண்மையில் பண்டிதன்.

மூர்க்கர்கள் மிக அற்பமான — வெறுக்கத் தகுந்த காரியங்களை மிகத் துணிவுடன் பலர் அறியச் செய்ய முற்படுவர். "அறிஞர்கள் பழிக்கக்கூடிய - மிகக்கொடிய - பயனற்ற செயல் இது" என அவர்களுக்கு ஒருபொழுதும் தோன்ருது. உலர்ந்துபோன ஒரு எலும்பு அதுவும் பலநாள் முன் இறந்த ஒரு கழுதையினுடையது அதில் கொஞ்சங் கூட மாபஸப் பசையில்லை. புழுக்களும் நெளி கின்றன. அதன் துர்கந்தமோ வெகுதூரம் வரை வீசுகிறது ஆனால் அதை மிகச் சுவையுள்ள தெனக் கருதி ஒரு அற்ப நாய் அதைப் பற்களால் கடிக்கின்றது. அப்பொழுது அந்த எலும்பு அதன் பற்களில் குத்தியதால பல் ஈரலிலிருந்து வெளிவந்த இரத்த மும் ஊன் தண்ணீரும் அந்த உலர்ந்த எலும்பில் படுகின்றது. அதை அந்த நாய் நக்கிச் சுவைத் துக் கொண்டிருக்கும் தருணத்தில் தேவேந்திரனே அருகில் வந்து நின்ருலும் அது இலட்சியம் செய் யாது இந்த அறு வறுக்கத் தக்கக் காரியத்தைச் செய்கின் ருேமே என அதற்கு வெட்கமு மிராது மூர்க்கர்களின் செயல் களும் இவ்விதமாம்.

மூர்க்கன் தம் பதவிகளைத் துறந்து பற்பல துன்பங்களுக்கும் அவமானங்களுக்கும் உள்ளாகி இறுதியில் யாருமறியாத இடத் தில் வசிக்கும்படியாகவும் நேரிட லாம். தம் பதவியை இழந்த வனுக்குத் தொடர்ந்து பல சரிவு கள் ஏற்படும் என்பதற்கு கங்கை யை உதாரணமாகக் கூறுகிருர் கவிஞர்.

சுவர்க்கத்திலிருந்து சிவபெரு மான் சிரஸிலும் அதிலிருந்து இமய மலையிலும், அங்கிருந்து பூமியிலும், அதனின்று சமுத்தி ரத்திலும் விழுந்து இறுதியில் யாருக்கும் புலப்படாத மிகக் குறுகிய ஒரு ஸ்தானத்தை அடைந்துவிட்டாள் கங்கை உலகமனைத்தும் போற்றும் மிக்க மகிமை வாய்ந்த கங்கைக்கே இந்த கதி என்ருல் மற்றவர்களைப் பற்றி கூறவும் வேண்டுமா?

பகீரதன் என்ற அரசன் கபில முனிவரின் சாபத்தால் சாம்ப லாகிக் கிடந்த தம் முன்னோர் களுக்கு நற்கதியேற்பட விடா முயற்சியுடன் கடுந்தவம் புரிந்து பிருஹ்மதேவன் அருள்பெற்று கங்கையை சுவர்க்கத்திலிருந்து மண்ணுலகிற்குக் கொண்டுவந்த காலத்தில் கங்கைக்கு ஏற்பட்ட நிலையை இங்கு இக்கவி இவ்வாறு வர்ணித்துள்ளார்.

நீரால் நெருப்பை அணைக்க லாம். முறத்தால் வெய்யிலைத் தன் உடலில் படாமல் தடுக்க லாம். மதம் பிடித்த யானையை கூர்மையான அங்குசத்தால் அடக்கலாம் எருதையும் கழுதை யையும் தடியால் தடுக்கலாம். கொடிய வியாதிகளை சிறந்த மருந்துகளால் நீக்கலாம். விஷத்தைப் பலவித மந்திரப்பிர யோகங்களால் விலக்கலாம். இவ் வாறு எல்லாவித துன்பங்களையும்

விலக்கிக் கொள்ள சாஸ்திரங்கள் பலவித உயாயங்கள் காண்கின்றன. ஆனால் மூர்க்கர்களுக்கு உள்ள கர்வம், பிடிவாதம், அறியாமை முதலியவற்றை நீக்க எவ்வித மருந்தையும் காணோம்.

அறிஞர்களைப்பற்றி

இவ்வாறு மூர்க்கர்களைப்பற்றி கூறி பிறகு அவர்களுக்கு நேர் மாறுதலாக வுள்ள அறிஞர்களைப் பற்றி கூறத்தொடங்குகிறார்—

பல நூல்களைக் கற்றுணர்ந்ததால் சுத்தமான சொற்களைக் கொண்டு சுவையாகப் பேசும் திறமை வாய்ந்தவர்களும், பல சிடர்களுக்கு சாஸ்திர நுட்பங்களை எடுத்துரைத்து அதன் மூலம் அவற்றை எங்கும் பரப்பி மிகப் பிரசித்திபெற்றவர்களுமான கவிகள் - பல கலைகளைக் கற்றுணர்ந்தவர்கள் சிறும் சிறப்புடனும் ஒரு தேசத்தில் வாழ்ந்தால் அதனால் அந்த நாட்டிற்குப் பெருமையும் இலாபமுமுண்டு. அவ்வாறின்றி அவர்கள் வீடு வாசல் முதலிய வசதிகளற்று வாழநேர்ந்தால் அது அந்த நாட்டை ஆளுகின்றவர்களின் மதியீனத்தைத்தான் வெளியிடும். அதனால் அறிஞர்களின் மதிப்புக் குறையாது. பொருள் இல்லாத போனாலும் அவர்களிடமுள்ள வித்யை என்ற பொருளைக் கொண்டே அவர்கள் எங்கும் போற்றப்படுவர். இரத்தின பரீக்ஷையில் தேர்ச்சியற்றவர்கள் விலையுயர்ந்த இரத்தினங்களைக் குறைவாக மதிப்பிட்ட காரணத்தால் அவற்றின் மதிப்பிற்குக் குறைவுண்டோ? நன்மைகளைப் பெற விரும்பும் தனவந்தர்களும், ஆட்சி பீடத்தில் உள்ளவர்களும் அறிஞர்களைப் பேணிப் பாதுகாக்க வேண்டுமென்பது கருத்து.

பொன், காசு முதலிய பொருள்களைவிட வித்யை என்ற பொருள் (தனம்) பலவிதத்திலும் சிறந்தது. வித்யை என்ற பொருள் திருடர்களுக்குப் புலப்படாதாகையால் அவர்கள் அதை எடுத்துச் செல்ல முடியாது. அது எக்காலத்திலும் சிறந்த இன்பத்தை அளித்துக்கொண்டே இருக்கும். விரும்பியவர்களுக் கெல்லாம் அதை வாரி வாரி வழங்கினாலும் வளருமேயல்லாமல் குறையாது. பிரளய காலத்தில் கூட அது அறவே அழியாது. அவ்வித வித்யாதன முள்ளவர்களிடம் ஏ தனவந்தர்களே! அரசர்களே! உங்கள் கோபம் தாபம் கர்வம் முதலியவற்றைக் காண்பிக்காதீர்கள். அவர்களுக்கு உரியமரியாதைகளைச் செலுத்தி அவர்களைப் போற்றுங்கள். எக்காரணம் கொண்டும் அவர்களை வெறுக்கலாகாது.

வித்யாதனத்தின் பெருமைகளை இவ்வாறு வர்ணிப்பதால் மற்ற தனங்களின் நிலைமையையும் மறைமுகமாகக் கவி வெளியிடுகின்றார். பொன் காசு முதலிய

வற்றை திருடர்கள் கொள்ளை யடித்துச் செல்லக்கூடும். பங்காளி களும் பங்கு கொள்வர். விரும்பி யவர்களுக்கு அளித்தல் குறைந்து விடும். அவற்றைப் பெறுவதற்கு முன்பும் பின்பும், எந்நிலையிலும் பலவித துன்பங்களையே விளைவிக் கும். ஆதலால் எந்த தலம் சிறந் தது என்பதை நன்கு சிந்தித்துப் பாருங்கள்.





திருமுருக கிருபானந்தவாரியார் அவதரித்த
புண்ணிய பூமி காங்கேயநல்லூரில்
5-3-72உ இலட்சதீப விழாவில்
பழநி பரிமள விலாஸ்
S.சித்தனாதன்சன்ஸ் S.குருசாமி அவர்களுக்கு
சதானந்த விபூதி சக்கரவர்த்தி
என்ற பட்டத்தை வெள்ளியினால் பொறித்த கேடயம் கொடுத்தபோது
எடுத்த படம்.

# நாகரிகம் வேண்டுபவர்

ஸ்ரீ சு. இராசப்பா, ஆழ்வார் திருநகர்

இந்த இருபதாம் நூற்றுண்டில் யார்தான் நாகரீகமாக இருக்க விரும்பவில்லை! ஆனால் எது நாகரீகம் என்பதைப்பற்றி நாம் சிந்தித்தோமா? உண்பதிலும் உடுப்பதிலும், உறையுள் அமைப்பதிலும், பிறவற்றிலும் நாம் செய்யும் முன்னேற்றம் தான் நாகரிகம் என நாம் கருதுகிறேம்.

உயர்வகையான மாடி வீடுகளில் வாழ்வதும், பகட்டான ஆடை அணிகளை அணிந்து ஒய்யாரமாகத் திரிவதும், அறுசுவை உணவு உண்டு களிப்பதும் நாகரீகம் என்று நாம் கருதுகிறேம்.

தையற்காரர்களும், வாசனைப் பொருள் வியாபாரிகளும், பொன் வேலைக்காரரும் வளர்தத நாகரீகமே நாம் போற்றும் நாகரீகமாக இருக்கிறது மனிதன் நாகரீக ஏணியின் கடைசிப்படியை அடைநது விட்டதாகப் பலர் கூறுகின்றனர். தற்கால மனிதனின் விஞ்ஞான அறிவு அவனை நாகரீகம் உள்ளவனுக்கி விட்டதாக சிலர் நம்புகின்றனர். புறத்தே காணப்படும் காட்சிகளைக் கொண்டு நாகரீகத்தை அளக்க முடியாது.

நாகரிகத்தின் அளவுகோல் மனித அகத்தின் அழகாகும். மெலியோரை வலியோா வாட்டி வளம்பெறுவதும், நாடும், நாடும் போர் செய்துகொள்வதும், மனிதன் பிறரை பழிவாங்கும் வகையில் நடந்து கொள்வதும், பிறரைத் துன்புறுத்துவதையே வாழ்க்கையாகக் கொண்டு ஒழுகுவதும், மக்களிடையே பேதம் பல கற்பித்து சமூகத்தை இருநிலைப் படுத்துவதும் ஆன நிலைமை உள்ள வரை நாம் நாகரீகம் அடைந்துள்ளதாக எவ்வாறு கூற முடியும்?

நாம் நமது மனப் பண்பாட்டில் நாகரீகம் அடைந்திருக்கிறேமா என சிந்திக்க வேண்டும். நமது எண்ணததில் நாகரீகம் ஏற்பட்டிருக்கிறதா?

ஏனெனில் பலர் எண்ணிய எண்ணங்களே இன்று கலையாகவும், சமயமாகவும், அரசியலாகவும் அமைந்துள்ள எல்லாவற்றிற்கும் காரணம். எண்ணங்களே உலக வாழ்க்கையின் வித்துக்கள். "குடும்பங்கள் எண்ணிய எண்ணங்கள் தான் நாகரீகம்! எண்ணங்களால் அமைந்தவைகளே, வீடு, நகரம், நாடு எல்லாம். எண்ணங்களால் ஆனவைகளே ஓவியம், காவியம், இசை, நாடகம் எல்லாம்; எண்ணங்களால் ஏற்பட்ட அவைகளே ஒழுக்கம், அறம், சமயம் எல்லாம்."

எனவே நமது எண்ணத்தில் நாம் நாகரீகம் உடையவர்களாக இருக்க வேண்டும். நமது பண்பாட்டில் நாகரீகம் அடைந்தவர்களாக இருக்க வேண்டும். இதைத்தான் திருவள்ளுவரும், மற்ற சான்றேர்களும் நாகரீகமாகக் கருதினர்கள். அவர்கள் புறவாழ்

வில் நிகழும் மாறுதல்களை நாகரீக மாகக் கருதவில்லை. அகவாழ்வில் ஏற்படும் நல்ல பண்புகளை, நெஞ்சின் உயர்நிலைகளையே நாகரீக மாகக் கருதினர்கள்.

நாகரீகத்திற்கு விளக்கம் கூறிய திருவள்ளுவர் பிறர் வருந்தாம லிருக்க தம் வருத்தத்தை மறைப்பது நாகரீகம் என்ருர். நாகரீ கத்துடன் வாழ்பவர்கள், பிறர் வருந்தாமல் வாழட்டும் என்று அவர்கள் இட்ட நஞ்சும் உண்டு, தம் உயிர் வேதனை தெரியாமல் அமைதியும் பூணுகின்ருர்கள். நஞ்சு இட்டவர்களிடம் சினம் கொள்ளாமல், அவர்களை பழிக் குப்பழி வாங்காமல்; அவர்களைத் தண்டிக்காமல், அவர்கள் நஞ்சு இடுவதைக் கண்டும் கொள்ளும் பொறுமை; அதை எடுத்து உண்ணத் துணியும் துணிவு, உண்ட பின்னும், இட்டவர் மனம் நோகக் கூடாது என்று உயிர் வேதனையை தமக்குள் அடக்கிக் கொள்ளும் அமைதி இவைகள் மனப்பண்பாடு என்னும் நாகரீகத்தை எடுத்துக் காட்டுகின்றது. இந்த முறை யிலே நமது எண்ணத்திலே, மனப் பக்குவத்திலே நாம் நாகரீகம் அடைய வேண்டும். நமது புற வாழ்க்கையின் போக்கு, நமது அகவாழ்க்கையின் நாகரீகத்தை அழித்து விடாமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

"பெயக்கண்டும் நஞ்சுண்டு
அமைவர் நயத்தக்க
நாகரீகம் வேண்டு பவர்"

என்ற குறளுக்கு இலக்கணமாக, நாகரீகப் பண்பாடு உடையவர் களாக நாம் இருக்க முயல வேண் டும்.



---

## எல்லோரும் விபூதி தாரணர்களே

திருமால், பிரமதேவர், இராமர், கிருஷ்ணர், இந்திரன் ஏனைய தேவர்கள், முனிவர், கின்னரர், கிம்புருடர், வித்தி யாதரர், கருடர், பூதர், இயக்கர், அசுரர், உரகர், சாரணர் சித்தர், கந்தருவர், பைசாசர், இராக்கதர், யோகபூமியர், ஆகாயவாசிகள், அரிச்சந்திரன், நளன், புருகுச்சன், பூரு ரவன், முசுகுந்தன், கார்த்தவீரியன், என்ற ஆறு சக்கிர வர்த்திகள், கயன், அம்பரீடன், சசிபிந்து, சிபி, பிருது, மருத்துவான், பரதன், சுகோத்திரன், திலீபன், ரகு, அந்தி தேவன், யயாதி, மாந்தாதா, பகிரதன், அனங்கன் என்ற பதினைந்து மகாமன்னர்கள், ஏனைய சூரியகுல, சந்திரகுல அரசர்கள் அனைவரும் விபூதி. உருத்திராக்கதாரணர்களே என்று வேதாகம உபநிடதஸ்மிருதி (மிருதி) புராணே திகாச முதலியவற்ருல் குன்றின் மேலிட்ட விளக்குபோல் விளங்குகின்றது. —ஸ்ரீ கிருபானந்த வாரியார் சுவாமிகள்.

*(பழநி, அடிவாரம் பரிமளவிலாஸ் விபூதி ஸ்டோர் S. சித்தநாதன் சன்ஸ் வெளியிட்ட திருநீற்றின் தெய்வநலம் என்ற புத்தகத் தில் ஒரு பகுதி)*

# தமிழ் ஆழம் கண்ட ஆசார்யாள்

மநுரமித்திரன் என். சுப்பிரமணியம்

புதுக் கோட்டைக்குச் சில மைல்கள் தூரத்திலுள்ள பனையப்பட்டி என்னும் ஊரில் ஸ்ரீ காமகோடி பீடம் நம் ஆசார்யாள் முகாம் செய்திருந்தார்கள். சுமார் இரண்டு மாதங்கள் ஸ்ரீ மடம் அங்கு முகாம் போட்டிருந்ததாக ஞாபகம்.

வேதம் உணர்ந்தவர், சாஸ்திரம் கற்றவர் முதலான பண்டிதர்கள் பலர் அடிக்கடி விஜயம் செய்வார்கள்.

அங்கு ஒரு நாள் "மகா மகோபாத்யாய" டாக்டர் உ. வே. சாமிநாதையரவர்கள், பெரியவாளைத் தரிசிக்க வந்தார்கள். ஸ்ரீ மடம் முகாம் செய்திருந்த கட்டிடத்தின் மாடியில் பெரியவாள் இருந்தார்கள்.

வயது முதிர்ந்த ஐயரவர்கள், பக்கத்தில் மாணவன் தேங்காய் பழத்தட்டு ஒன்றைக்கையிலேந்தி வர மாடியில் ஏறினர்கள். தூய வெள்ளை உடையைப் பஞ்சகச்சம் தரித்து-விபூதி ருத்திராக்க மணிந்த சிவப்பழமாக விளங்கிய ஐயரவர்கள், பெரியவாள் சந்நதியில் தேங்காய் பழத்தட்டை வைத்து சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தார்கள்.

பெரியவாள், புன்முறுவலுடன் கையமர்த்தி அநுக்ரகம் செய்து எதிரில் அமரச் செய்தார்கள். "கடல் குடித்த குடமுனி" என்று தமிழுக்கு இலக்கணம் தந்த அகத்தியனாரைச் சிறப்பித்துக் கூறுவர்; அந்த அகத்தியனாரே மறு அவதாரம் எடுத்தாற் போன்ற ஐயரவர்கள் அடக்கமே உருவாக அமைந்து பெரியவாளுடன் உரையாடிக் கொண்டிருந்தார்கள்.

நுட்பமான பல ஆராய்ச்சி மிக்க கேள்விகளைப் பெரியவாள் எழுப்பவும் ஐயரவர்கள் அதற்கு விளக்கம் கொடுத்து வரவும் பல மணி நேரங்கள் இந்தச் சுவை மிக்க சம்பாஷணை நீடித்தது.

சில கருத்துக்களைத் தெரிவிக்கும் பொழுது, "புலவர்கள் கொண்ட முடிவு இதுவாக இருக்கும்" "உரையாசிரியர்கள் இவ்வாறு பொருள் கொண்டார்கள்" "ஆராய்ச்சியாளர் கருத்து இதுவாக இருக்கும்" "பெரியவர்கள் இவ்வாறு கூறியதாக என் நினைவு" என்று ஐயரவர்கள் கூறி வந்தார்களே ஒழிய "நான் முடிவு கட்டும் விளக்கம் இதுதான்" என்று தற்பெருமையாக ஒரு வார்த்தை கூடச் சொல்லவில்லை,

தமிழ்க் கடலின் ஆழத்திலுள்ள முத்துக்களைப் பெரியவாள் ஐயரவர்கள் முன்னிலையில் வைக்க ஐயரவர்கள் அம்முத்துக்களின் பெருமையையும் மதிப்பையும் எடைபோடும் வர்த்தகராக விளங்கினார்கள்.

மறுநாள் மடத்தில் உள்ள வடமொழி வல்லுனரான ஒரு சாஸ்திரிகள் ஐயரவர்களிடம் பெரியவாள் போட்ட கேள்விகள் பற்றி ஆச்சர்யப்பட்டார். தமிழில் பூர்ண பாண்டித்யம் உள்ளவர்களுக்கே இந்த வினாக்களை எழுப்ப முடியும்! பெரும் பண்டிதரான மகா மகோபாத்யாய ஐயரவர்களிடம் எப்படி இந்தக் கேள்விகளைக் கேட்டார்கள்; இவ்வளவு பெரிய தமிழ் நூல்களை எப்பொழுது பெரியவாள் படித்தார்கள்; ஆராய்ந்தார்கள்; ஐயரவர்களைக் கண்டவுடன் இவைகளெல்லாம் சர்வ சாதாரணமாக எப்படி நினைவிற்கு வந்தது? என்று சொல்லிச் சொல்லி வியந்தார்.

"வேத, சாஸ்திரம் முதலான வடமொழிப் புலமை அளவு பெரியவாளுக்குத் தமிழ்ப் புலமை இல்லை" என்று நினைத்த அந்த சாஸ்திரிகளுக்கு, முதல் நாள் சம்பவம் பெரும் ஏமாற்றத்தை அளித்தது. தன் குறைவால் பெரியவாள் நிறைவை அறிய முடியாத தவறை அன்று அவர் உணர நேரிட்டது. நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு நிகழ்ந்த சம்பவம் ஆனாலும் இன்றும் நமக்கு இது பசுமையான நினைவாக உள்ளது.

"குணகடல் குமரி குடகம் வேங்கடம் எனு நான் கெல்லையின் இருந்தமிழ்க்கடலுள்" மூழ்கி, அருமையான முத்துக்களையும் ரத்தினங்களையும், பவளங்களையும் ஏனைய சங்க நிதிகளையும் வாரி எடுத்து அதன் அருமை பெருமைகளை நன்குணர்ந்தவர்கள் நம் ஆசார்யப் பெருமான் ஆதலால் இத்துறையில் பாடுபட்டவர்களைக் கௌரவிப்பதிலும் அநுக்ரகம் புரிவதிலும் பெருமகிழ்வு கொள்வதுண்டு.

உ. வே. சாமிநாதையரவர்களின் உயர்ந்து நிறைந்த தமிழ்ப் புலமையைப் பாராட்டி அக்காலத்து பிரிட்டிஷ் அரசாங்கம் "மகாமகோபாத்யாய" பட்டத்தை அளித்தது.

இறவா புகழ் படைத்த தேசியக் கவி சுப்பிரமணிய பாரதி, தனது பாடலில் "கும்பமுனியெனத் தோன்றும் சாமிநாதப் புலவன்" என்று ஐயரவர்களை அகத்திய முனிவரென்று பாராட்டினார். எல்லாவற்றிற்கும் மேலாக "தாக்ஷிணாத்ய கலாநிதி" "திராவிட வித்யாபூஷணம்" என்ற பட்டங்களையும், பரிசுகளையும் ஆசார்யாள் அளித்து அநுக்ரகித்ததை, "தான் பெற்ற பிறவியின் பெரும் பேறு" என்று ஐயரவர்கள் ஏற்று அகமகிழ்ந்தார்கள். "மனிதப் பிறவியும் வேண்டுவதே இந்த மானிலத்தே" என்ற அருள் வாக்

கிற்கு ஐயரவர்கள் எடுத்துக் காட்டாக விளங்கினார்கள்.

மற்றும் அக்காலத்துப் பெரும் புலவர்கள் பலர் நம் பெரியவாளைத் தரிசிக்க வருவார்கள். "பண்டித மணி" கதிரேசன் செட்டியாரவர்கள் பல தடவைகள் பெரியவாளைத் தரிசித்து நீண்ட நேரம் சம்பாஷணை நடத்துவதுண்டு. "குஞ்சிதபாதம்" என்று சிலேடையாகப் பெரியவாள் அழைப்பார்கள். செட்டியாரவர்களுக்கு ஒரு கால் ஊனம் ஆதலால் ஒரு காலை ஊன்றி கோலின் உதவியுடன் மற்றொரு காலை நொண்டியே நடப்பார்கள்.

நடராஜப் பெருமான் ஒரு காலை ஊன்றி ஒரு காலைத் தூக்கியே நிற்பதால் அதை நினைவு படுத்துவதாக இருக்கும் "குஞ்சித பாதம்" என்று பெரியவாள் செல்லமாக அழைக்கும் பொழுது செட்டியாரவர்கள், பல்லெல்லாம் வெளியில் தெரிய வாய் விட்டுச் சிரித்துப் புளகாங்கிதம் அடைவார்கள். "சுக்கிர நீதி" என்னும் பெரிய வடமொழி நூலை செட்டியாரவர்கள தமிழாக்கம் செய்திருந்தார்கள்.

"இம்மென்னு முன்னே எழுநூறும் எண்ணூறும் அம்மென்றால் ஆயிரம் பாட்டாகாதோ" என்று கவிச்சக்ரவர்த்தி புலவர் பெருமான் ஒருவர் அன்று பாடினார். இதற்கொப்ப, பல இனிய தமிழ்க் கவிதைகளைப் பாடும் திறமை அகத்தியான்பள்ளி வைத்திநாத சர்மா என்னும் புலவர் பெற்றிருந்தார். நூற்றுக் கணக்கான கவிகளைப் பாடி பெரியவாள் சந்நிதியில் வந்து படித்து மகிழ்வார். தேவி பாகவதம் என்னும் நூலை ஆயிரக் கணக்கான செய்யுள் வடிவத்தில் இயற்றிய புலவர் இவர். "கவிச் சக்ரவர்த்தி" என்று கொண்டாடப் பெற்ற இவருக்கு நம் ஆசார்யாள், சால்வைகளும் சன்மானங்களும் அளித்து அனுக்கிரகித்தார்கள். "நுணுக்கமான தமிழ்ச்சுவை அறிவதில மதுரைச் சொக்கநாதப் பெருமானே மறு அவதாரம்" என்று ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதிப் பெரியவாளைப் பற்றி அடிக்கடி பல இடங்களில் ஸ்ரீ சர்மா கூறி வந்ததை நாம் கேட்டிருக்கிறோம். தமிழ்ப் புலவனுக்காக சொக்கநாதர் விறகு தலையனாகக் காட்சி கொடுத்தாரல்லவா?



# பிரார்த்தனை



மகாத்மா காந்தி

"யானைகளின் அரசனுகிய கஜேந்திரன் தண்ணீர் குடிக்கப் போனபொழுது முதலை அதன் காலைப் பிடித்து இழுத்தது. யானை யால் விடுவித்துக் கொள்ள முடிய வில்லை. கடவுளிடம் பிரார்த்தித் துக் கொண்டது. உதவியற்ற வர்க்கு உதவியாகவுள்ள கடவுள் வந்து யானையைக் காப்பாற்றி ஞர். இந்தக்கதையிலிருந்து நாம் அறிந்து கொள்வது என்ன? எவ் வளவு பலமிருந்தாலும் கடவுளு டைய உதவி இல்லாவிட்டால் எள்ளளவும் பயன்படுவதில்லை. கடவுளை மனப்பூர்வமாக நம்பு கிறவர்களுக்கு மனே தைரியம் உண்டாகும். அந்த மனேதைரி யத்தை நம்பி வாழ வேண்டுமே யன்றிப் பிறர் உதவியை நம்பி வாழக்கூடாது."

"கடவுள் அரசர்க்கரசராய், சகல வல்லமை பொருந்தியவராய் இருந்தபோதிலும் யார் சுய நலத்தை அறவே நீக்கிவிட்டு அவரையே நம்பி நிற்கிருரோ அவருடைய எந்த ஏவலையும் செய்ய அவர் காத்துக் கொண் டிருக்கிருர். ஆதலால் நாம் சுய நலத்தை விட்டுவிட்டு நம்மு டைய ஹிருதயத்திலேயே கட வுளைக் காணவேண்டும்."

"பிரார்த்தனை என்பது வேலை யில்லாத கிழவிகளின் பொழுது போக்கல்ல. அதைச் சரியாக உணர்ந்து கடைப்பிடித்தால் அதைவிடச் சக்தி வாய்ந்த ஆயு தம் எதுவுமில்லை என்பதை உணர்வோம்."

"கடவுளிடம் பக்தி வேண்டும்; அப்பக்தியை நாம் நம் வாழ்க்கை யிலேயே வாழ்ந்து காட்ட வேண் டும் என்பதுதான் பிரார்த்தனை யின் அடிப்படைத் தத்துவம்."

"கடவுளை நாம் எப்பெயரி கொண்டு அழைத்தாலும் சரி; வாழ்க்கையின் உயிர்த்தத்துவம் கடவுள்தான். நீதியும் நீதியை நியமித்தோனும் கடவுள் தான் என்பதை மட்டும் உணர்ந்தால் போதும்."

"ஜனகரிடம் வந்து, 'உங்க ளுடைய ராஜதானிப் பட்டணம் கொழுந்துவிட்டு எரிகிறது' எனக் கூறியபொழுது 'அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை' என்று

எப்படி அவர் பதட்டமில்லாமல் கூறினாரோ அப்படியே நாமும் இருக்கவேண்டும். அவர் அந்த மாதிரிக் கூறியதன் ரகசியம் அவர் எப்பொழுதும் தம்முடைய கடமையைச் செய்வதில் சர்வ ஜாக்கிரதையாக இருந்து வந்ததேயாகும். தம்முடைய கடமையைச் செய்து முடித்து விட்டதால் பிறவற்றை யெல்லாம் கடவுளிடம் விட்டுவிடக் கூடியவரா யிருந்தார்."

"தம்முடையது என்று எண்ணிக்கொள்ளும் ஒவ்வொன்றையும் கடவுளுடையதே என்பதை ஏற்றுக்கொண்டு வாழ்வுக்கு இன்றியமையாத அளவு அவற்றை மட்டுமே அனுபவித்தல் வேண்டும்: அதாவது பகவத்கீதையில் கூறியுள்ளபடி நாம் அணுவளவு கூடப் பற்றில்லாமல் வாழவேண்டும்."

"பிறர்க்கு பெரிய தீங்குகளைச் செய்து விட்டால் உடனே அதற்காக மனம் வருந்திக் கடவுளிடம் மன்னிப்பு வேண்டிக்கொள்ள வேண்டும். கடவுள் மன்னிப்பு அளித்தால் நல்லதேயாகும். அளிக்காவிட்டால் கடவுளை நம்பி வாழ்பவருக்கு எவ்விதத் தீமையும் உண்டாகாது. கடவுள் கொடுக்கும் தண்டனையைச் சந்தோஷமாக ஏற்றுக்கொண்டால் அது நம்முடைய ஆன்மாவை உன்னத நிலையடையும்படிச் செய்யும்."



## பிரம்ம ஞானி

ஞானிகள் போக்தாக்களாக இருந்து அருந்துவதில்லை. உள்ளிக்கும் ஏதோ பெரிய பொருள் ஒன்றுக்கு ஆஹுதி படைப்பது போன்று அருந்துகின்றனர்.

சுய அபிமானம் சிறிதேனுமில்லாத சமய ஆசாரியர் ஒருவரிடத்துப் பரந்த மனப்பான்மை ஒன்றைக் காணலாம். அதாவது அவரிடம் யாரேனும் வந்து ஆத்மீக விஷயதைப் பற்றி ஏதாவது கேட்டால், தமக்குத் தெரிந்திருப்பதைவிட அதிகம் தெரிந்திருக்கிற வேறு ஓர் ஆசாரியரை குறித்துக்கூறி அவரிடம் போகும்படி அவர் தூண்டுவார்.

வெறும் வாய்ப்பேச்சாளர்கள் பரம்பொருளைப் பற்றியும் பிரபஞ்சத்தைப்பற்றியும் என்னென்னவோ ஏராளமாகப் பேசுகின்றனர். ஆனால் அனுபூதிமான்களுடைய போக்கு வேறு. பொருந்திய சில வார்த்தைகளை மட்டும் அவர்கள் பேசுவார்கள்.

—ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேசம்.

# பெருமாள்

தொண்டர் குலத்துக்குத் தலைவராகவும் மன்னர் குலத்துக்கு மகுடமாகவும் விளங்கியவர் குலசேகர மன்னர். மாசிப் புனர்வஸு இவருடைய பிறந்த நாள். இவர் பாடிய பத்துத் திருமொழிகளுள் அடங்கிய 105 பாசுரங்களும் பக்திச் சுவையாலும் கவிதைச் சுவையாலும் மேம்பட்டவை.

திருவரங்கம், திருவித்துவக்கோடு, திருவேங்கடம் ஆகிய ஸ்தலங்களையும் ஸ்ரீராமகிருஷ்ணாவதாரங்களையும் இவர் சிறப்பித்துப் பாடியிருக்கிறார். 'கொல்லி நாயகன்' என்றும், 'கூடல் கோமான்' என்றும், 'கொங்கர்கோன்' என்றும், 'கோழிக்கோன்' என்றும், 'சேரன்' என்றும் தம்மையும், 'கூர்வேல்' என்றும், 'கொற்றவேல்' என்றும் தம் படையையும், 'நற்றமிழ்' என்றும், 'நல்லிசைத் தமிழ்' என்றும், 'நல்லியலின் தமிழ்' என்றும், 'நடைவிளங்கு தமிழ்' என்றும் தம்முடைய பாடல்களையும் இவர் சிறப்பித்துக் கூறுவது தற்புகழ்ச்சியன்று; முற்றும் உண்மையேயாகும்.

இவர் 'மதயானைக் கழுத்தகத்தின் மேலிருந்து இன்பமருஞ் செல்வமும் இவ்வரசும் யான் வேண்டேன்' என்று துறந்தவர்! ஆளும் போதும், கிரீடம் பூணாது, 'தில்லைநகர்த் திருச்சித்ரகூடந் தன்னுள் அரசமர்ந்தானடிசூடும் அரசையல்லால் அரசாக எண்ணேன் மற்ற ரசுதானே' என்று திருமாலின் திருவடிகளையே கிரீடமாகக் கொண்டு 'மாலடிமுடிமேற் கோலமாங் குலசேகர'ராக விளங்கியவர்.

இவரைப் பின்பற்றியே, இன்றும் சேர வம்சத்தினரான திருவனந்தபுரம் கொச்சி மன்னர்கள் மகுடம் புனையாது அடிமைக்கு உரிய வெள்ளித் தடியைத் தாங்கித் திருமாலின் சேவகர்களாக விளங்குகிறார்கள்.

முத்தமிழ்நாடு முழுவதிலும் ஆட்சி செலுத்திய இவர், "திருமாலடியார்களாகிய நாட்டு மக்களே மன்னராவார்; தம்முடைய நாட்டிலுள்ள 'புற்பா முதலாப் புல்லெறும்பாதி யொன்றின்றியே சராசரம் முற்றவும்' தெய்வமென்று கொண்டு உபாசித்த ஸ்ரீராமனை அடிசூடியே நானும் மன்னனுவேன்" என்றதனால், இவரையே இன்றும் தமிழ் நாடு 'பெருமாள்' என்று போற்றுகிறது.

தமிழ் நாட்டினர் இன்றும், இவர் பாடலின் வழிநின்று,

'தான் நோக்காது எத்துயரஞ் செய்திடினும் தார்வேந்தனின் கோல் நோக்கி வாழுங்குடி'களாக வாழ்கிறார்கள். இன்று அரசுபுரிவோரும் குலசேகராழ்வாருடைய மனநிலையைப் பெற்று, 'நீதில் நன்னெறி நிற்க அல்லாது செய் நீதியாரொடுங் கூடுவதில்லை யாம்' என்ற மனவுறுதியோடு முயன்று, 'நாட்டு மக்களைக் கடவுளாகக் கொள்வோனே மன்னன் இராமன் போல்வான்: மக்களை நோக்கி அவர்களுக்கு எத் துயரமுஞ் செய்யாது உறுதுயரந் துடைக்குஞ் செங்கோன்மையே ராம ராஜ்யம்' என்னும் உண்மையை மெய்ப்பிப்பார்களாக.

●

---

## திருமுருக கிருபானந்தவாரியார் ராமாயணம் கிராம போன் ரிகார்டு வெளியீடு

ஸ்ரீ கிருபானந்தவாரியார் சுவாமிகள் "கம்ப ராமாயண உபன்யாசம்" கிராமபோன் ரிகார்டு வெளியீட்டு விழா சென்ற ஜனவரி 10ந்தேதி சென்னை உட்லண்ட்ஸ் ஹோட்டலில் நடைபெற்றது. சுமார் நாற்பது நிமிஷத்துக்கு ஒலிக்கும் ரிகார்டு இது.

இம் முதல் ரிகார்டில் ஸ்ரீ ராம ஜனனம் வரை உள்ளது. சரஸ்வதி ஸ்டோர்ஸ் மானேஜர் திரு எஸ். கிருஷ்ணமூர்த்தி அடுத்த வரிசை ராமாயண ரிகார்டுகள் விரைவில் வரும் என்று அறிவித்தார்.

வெளியீட்டு விழாவில் கலந்து கொண்ட ஸ்ரீ கிருபானந்த வாரியார் சுவாமிகள் பேசுகையில் ராமாயணம் தர்மத்தின் பொக்கிஷம் என்று கூறினார். திருக்குறள், திருவாசகம், அப்பர் திருஞானசம்பந்த தேவாரம், அருணகிரியார், தாயுமானவர் போன்ற மகான்கள் ராமாயணத்தைக் குறிப்பிட்டுள்ளனர். எல்லாருடைய உள்ளங்களையும் கவரும் ஆற்றல் படைத்தது ராமாயணம். வைணவ சமய பேதமின்றி, அறத்தின் செல்வமாகத் திகழ்கிறது. உளப்பாங்கை உயர்த்தும். ஒழுக்கத்தை வளர்க்கும். அவரவர் இல்லங்களிலேயே ராமாயணத்தைக் கேட்பவர்தம் பிணிபோம். பின் தலைமுறைகள் வாழச் செய்யும் என்று வாரியார் சுவாமிகள் கூறினார்கள்.

விழா ஆரம்பத்தில் சரஸ்வதி ஸ்டோர்ஸ் ஸ்ரீ கண்ணன் யாவரையும் வரவேற்றார்.

# ஸ்ரீ ராமகிருஷ்ண குடில்
# ஆண்டு விழா

31—12—72-ம் தேதி திருச்சி, திருப்பராய்த்துறையிலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண குடிலில், ஸ்ரீ ராமகிருஷ்ணர் ஜெயந்தி விழாவும், ஸ்தாபனத் ன் பல்வேறு கிளைகளின் ஆண்டு விழாவும் நடைபெற்றன.

அதிகாலை ஆஸ்ரமக் கொடியேற்று விழாவும், அதைத் தொடர்ந்து பரமஹம்ஸர் திருவுருவப்பட சிவாலய ஊர்வலமும் நடந்தேறின.

மதியம் மஹேஸ்வர பூஜை (அனைவர்க்கும் அன்னம் பாலிப்பு) ஆயிரக்கணக்கான பேர்களுக்கு காவிரிக் கரையிலுள்ள ஆஸ்ரமத் தென்னந்தோப்பில் நடைபெற்றது.

மாலைப் பொதுக் கூட்டத்தில் திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள், தமிழ்நாடு உயர் நீதிமன்ற நீதிபதி ஜஸ்டிஸ் திரு. எஸ். மஹராஜன் அவர்கள் கலந்துகொண்டு சிறப்புரையாற்றினார்கள். இரவு "தேச பக்தி" என்ற நாடகம் குருகுல மாணவர்களால் நடிக்கப் பெற்றது.

1974-ம் ஆண்டு ஸ்தாபனத்தின் வெள்ளி விழா நடைபெற இருக்கிறது. அதற்குள் "திருவருள் திட்ட நிரந்தர மூலதன நிதி" என்ற அமைப்பில் இங்குப் புகலிடம் பெற்றுள்ள ஒவ்வொரு அனாதைக் குழந்தைக்கும் ரூ 5000/-வீதம் சுமார் 300 குழந்தைகளுக்கு ரூபாய் பதினைந்து இலட்சம் வரை நிதி திரட்டுவதென சென்ற ஆண்டு முடிவு செய்யப்பட்டதில், இதுவரை 100 குழந்தைகளுக்கான ரூபாய் ஐந்து இலட்சம் வரை சேர்ந்திருக்கிறது. பாக்கியுள்ள 200 குழந்தைகளுக்கான ரூபாய் பத்து இலட்சத்தை வெள்ளி விழாவுக்குள் சேர்ப்பதற்கு ஆதரவு தரும்படி தமிழகத்திலுள்ள தனம், மனம் படைத்த பெருமக்களை திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகளும் கேட்டுக்கொண்டபின் ஆண்டு விழாக் கூட்டம் இனிதே முடிவடைந்தது.

# பகவான்

## ஸ்ரீ ஆதி சங்கரர்

எதுவரை மூச்சுக்காற்று உடலில் ஓடிக் கொண்டிருக்கிறதோ அதுவரை வீட்டில் உன்னுடைய நலத்தைப் பற்றிக் கேட்பார்கள். மூச்சுக் காற்றுப் போய் உடலுக்கு அபாயம் ஏற்பட்டால் மனைவி கூட அவ்வுடலைக்கண்டு அஞ்சுவாள்.

காமசுகத்திற்கு எவன் வசப்படுகிருனே அவன் நோய் வாய்ப்படுகிருன். மரணம் ஒன்றே முடிவு என்று கண்டும் ஒருவனும் பாவத்தினின்று விலகுவதில்லை.

மதிகெட்டவனே! பொருள் சேர்ப்பதில் ஆசையை விட்டொழி. வீணான ஆசைகளினின்று விலகிய நல்ல எண்ணங்களை மனதில் சிந்தனை செய். உன்னுடைய நிலைக்கேற்ற கருமங்களைச் செய்வதால் கிடைக்கக் கூடிய பொருளைக் கொண்டு மனதைச் சந்தோஷப்படுத்திக்கொள்.

பொருள் எப்பொழுதுமே துன்பம் விளைவிப்பதென்பதை மனதில் வைத்துக்கொள். அதனால் சிறிதளவு சுகம் கூட இல்லை என்பது உண்மை. பெற்ற பிள்ளையிடமிருந்துங்கூட, பொருள் படைத்தவர்களுக்கு பயம் ஏற்படுகிறது. இப்படித் தான் எல்லா இடங்களிலும் காணப்படுகிறது.

பொருள் சுற்றம் யௌவனம் முதலியவற்றைப் பற்றி கர்வம் கொள்ளாதே. காலம் ஒரு நிமிஷத்தில் எல்லாவற்றையும் கொண்டு போய்விடும். மாயாமயமான இவ்வனைத்தையும் விட்டு பிரம்மபதத்தை அறிந்து கொண்டு அதனுட் புகுவாயாக.

காமத்தையும் கோபத்தையும் பேராசையையும் மதிமயக்கத்தையும் ஒழித்து அஞ்ஞானத்தினின்று விடுபட்ட உனது உண்மை ஸ்வரூபத்தைப்பார். ஆத்மஞானமில்லாத மூடர்கள் நரகத்தில் வீழ்ந்து துன்பத்திற்காளாகிருர்கள்.

சத்துருவென்றும் மித்திரனென்றும், புத்திரனென்றும் உறவினனென்றும் வேற்றுமையைப் பாராதே. விஷ்ணு பதத்தை நீ விரும்பினுல் யாரிடத்தும் பகைமையும் நட்பும் பாராட்டாமல் எல்லோரையும் எல்லாவற்றையும் சமமாகப்பார்.

பிரணயாமம், மனதை உள்முகமாய்த் திருப்புதல், அழியும் பொருளையும் அழியாப் பொருளையும் ஆராய்ந்தறிதல், ஜபமும் ஸமாதியும் கூடுதல் ஆகிய மகத்தான ஸாதனைகளில் உன்னுடைய முழுமனதையும் செலுத்து.

தாமரையிலை மேலுள்ள தண்ணீர் மிகவும் சஞ்சலமானது. அதே மாதிரிதான் (உடலில்) உயிரும் அதிசயிக்கும்படி சஞ்சலமானது. உலகனைத்தும் நோயாலும் அகங்காரத்தாலும் பிடிக்கப்பட்டுத் துன்பத்தால் கொல்லப்படுகிறதென்பதை அறிவாயாக.

உன்னுடைய குருவின் திருவடித் தாமரைகளைப் போற்றி உலகத்திற் கடிமையாயிருப்பதினின்று உன்னை விடுத்துக்கொள். இந்திரியங்களையும் மனதையும் அடக்கி பகவானை உன் இதயத்தில் பார்.

# செய்திகள் செய்திகள்

- சக்தி சர்க்கரை ஆலை உற்பத்திச் சக்தியை தினம் ஒன்றுக்கு தற்போது உள்ள 2500 டன்னிலிருந்து 4 ஆயிரம் டன்னாக நடப்பு வருட இறுதிக்குள் உயர்த்த திட்டமிட்டுள்ளது. இதற்கான லைசென்ஸ் கிடைத்துவிட்டது என்று சக்தி சர்க்கரை ஆலை நிறுவனத் தலைவர் ஸ்ரீ என். மகாலிங்கம் அவர்கள் அண்மையில் தெரிவித்தார்கள்.

- 1972ம் ஆண்டில் இந்தியாவுக்கு வந்த வெளி நாட்டுச் சுற்றுலா பயணிகள் எண்ணிக்கை 343000. சென்ற டிசம்பர் மாதத்தில் மட்டும் வெளி நாடுகளிலிருந்து மிக அதிக அளவில் 40563 சுற்றுலா பயணிகள் இந்தியாவுக்கு வந்தனர். இந்தத் தகவல்களை சுற்றுலாத் துறையின் பத்திரிகை குறிப்பில் தெரிவிக்கப் பட்டுள்ளது.

- சென்னை துறைமுகத்தில் "பாரதிதுறையை" மத்திய கப்பல் போக்குவரத்துத்துறை அமைச்சர் ராஜ்பகதூர் பிப்ரவரி 4ந் தேதி ஆரம்பித்து வைத்தார். இந்தியத் துறைமுகங்கள் வரலாற்றிலேயே வேறு எங்கும் இல்லாத வாறு பிரம்மாண்டமான எண்ணெய் கப்பல்கள் இங்கு நிற்க ஆழ்கடல் வசதி ஏற்பட்டிருக்கிறது.

- சென்னையில் கூவம் நதியில் உல்லாசப் படகு போக்கு வரத்தை பிப்ரவரி 4ந் தேதி யன்று தமிழக முதலமைச்சர் கருணாநிதி தொடங்கி வைத்தார். கூவம் நிதி சீரமைப்புத் திட்டத்திற்கு மொத்தம் 2·28 கோடி செலவாகியது என்றும் குறிப்பிட்டார். கூவம் சீர்திருத்தத்தைப் போலவே பக்கிங்ஹாம் கால்வாய் சீர்திருத்தம் பற்றியும் சர்க்கார் ஆலோசித்துக் கொண்டிருக்கிறது என்றும் சொன்னார்.

- தவணை முறை விற்பன்னர்களான வி. ஜி. பன்னீர்தாஸ் சகோதரர்கள் அண்மையில் எளியவர்களுக்காக மிகக் குறைந்த விலையில் வீடு கட்டித் தந்து அவர்களுக்கே அந்த வீடு தவணை முறையில் சொந்தமாகும்படி ஒரு மிகச் சிறந்த திட்டத்தை அறிமுகப் படுத்தினார்கள். தமிழக முதல்வர் அந்தத் திட்டத்தின்படி கட்டிய முதல் வீட்டைச் சென்ற மாதம் வேளச்சேரியில் திறந்து வைத்து ஆசி கூறினார். 10 ஆண்டுகளில் இது மாதிரி லட்சம் வீடுகள் கட்டித் தவணை முறையில் கொடுக்க வேண்டும் என்பதே என் லட்சியம் ஆகும் என்று பன்னீர்தாஸ் அவர்கள் அந்த விழாவில் மிகம் பெருமையோடு குறிப்பிட்டார்கள்.

- தேசவுடமை ஆக்கப்பட்டுள்ள பாங்குகளில் ஒன்ருன சிண்டிகேட் பேங்க் இந்த ஆண்டில் 75 புதிய கிளைகளைத் திறக்க உத்தேசித்துள்ளதாக இந்த பாங்கின் ஜெனரல் மானேஜர் சமீபத்தில் பெங்களூரில் தெரிவித்தார். தற்போது இதற்கு 564 கிளைகள் இருக்கின்றன.

- தனியார்துறை பாங்கான பாங்க் ஆப் மதுரையின் கிளை ஒன்று சென்னை அண்ணுநகரில் போலீஸ் கமிஷனர் திரு. ஷெனுய் சென்ற மாதம் திறந்து வைத்தார். பாங்க் சேர்மன் ஸ்ரீ எல். கிருஷ்ணன் அவர்கள் பேசும்போது 1943ல் துவக்கப்பட்ட இந்த தனியார் துறை பாங்க் சென்ற 16 மாதங்களில் நல்ல முன்னேற்றம் கண்டுள்ளது என்றும் ரூபா 22 கோடிக்கு பிக்ஸட் டிபாஸிட் உயர்ந்துள்ளது என்றும் சொன்னுர்.

- கிழக்கு ஜெர்மனியில் நியூஸ்ட் ரெலிட்ஸ் என்ற ஊரில் கட்டப்பட்டுள்ள ஒரு புதிய பள்ளிக்கு ஜவஹர்லால் நேருவின் பெயர் சூட்டப்பட்டுள்ளது. இந்தியாவுக்கும் கிழக்கு ஜெர்மனிக்கும் இடையில் வளர்ந்து வரும் நட்புறவின் சின்னமே இந்தப் பெயர் சூட்டு விழா என்று நம் பாரதப் பிரதமர் திருமதி இந்திரா காந்தி எழுதியுள்ள ஒரு கடிதத்தில் கூறி உள்ளார்.

- இந்தியாவில் திருமணம் ஆகாத பெண்களைவிட, திருமணம் ஆகாத ஆண்கள் தொகை 6 கோடி ஆதிகம். 1971ல் எடுத்த புள்ளி விவரத்திலிருந்து இது தெரிகிறது. திருமணம் ஆனவர்களைப் பொறுத்தவரை ஆண்களை விடப் பெண்கள் 28 லெட்சம் அதிகம்.

- ரேடியோ, டெலிவிஷன் லைசென்ஸ்களை ஆண்டு இறுதியில் புதுப்பிக்க வேண்டும் என்ற ஏற்பாடு இப்போது அமுலில் உள்ளது. இதற்குப் பதிலாக எப்போது வேண்டுமானுலும் வருடத்தில் எந்த மாதத்தில் வேண்டுமானுலும் புதுப்பித்துக் கொள்ளலாம் என்று யூனியன் தபால் தந்தி உதவி மந்திரி ஜகந்நாத் பகாடியா தெரிவித்தார்.

- சென்ற ஆண்டு டிசம்பர் மாதத்தில் நாட்டில் 6,68,000 டன் சர்க்கரை உற்பத்தியாகி இருக்கிறது. அதற்கு முந்திய ஆண்டில் அந்த மாதத்தில் 6,00,000 டன் தான் உற்பத்தியாயிற்று.

---

ஆசிரியரும் வெளியிடுபவரும்: T ராமனுதன், 231, ஆழ்வார் திருநகர் சென்னை-87 அச்சிடுபவர்: கொண்டா. காசி. சீதாராமன், ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ், 81-5 பாண்டிபஜார், தியாகராயநகர், சென்னை-17